# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 2 விளைச்சல் : 15 திருவள்ளுவர் ஆண்டு 2052 ஆகத்துத் திங்கள் - 2021



- தின்பண்டங்களுக்கான கலைச்சொற்கள்!
- வட்டார மொழிகளைப் பாதுகாக்க வேண்டும்!
  - மேதகு துணைக் குடியரசு தலைவர்
- உயர் கல்விக்கான புதிய கலைச்சொற்களை உருவாக்க வேண்டும்! - மாண்புமிகு முதலமைச்சர்
- தமிழரின் தொன்மை கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்கு முந்தையது!
  - மாண்புமிகு அமைச்சர் தங்கம் தென்னரசு
- தமிழே எனது வாள்! தமிழே எனது கேடயம்!
- நலம்வாழ நாளொரு கீரை!
- துறைசார் தூயதமிழ்ச் சொல்லரங்கம்!
- வாழும் போதே வாழ்த்துவோம்!
- கணினித்தமிழ் வளர்ச்சி

## தின்பண்டங்களுக்கான கலைச் சொற்கள்

1.Halwa-இன்களி
2.Gulab jamun-தேங்கோளி
3.Ladoo-இன்னுருண்டை
4.Jalebi-தேன்குழல்
5.Rasagulla-சுவைக்கோளி
6.Barfi-தெங்கினிமா
7.Mysore pak-கண்டப்பாகு
8.Boondi-பொடிக்கோளி
9.Kara poondi-காரப் பொடிக்கோளி
10.Bajji-தோய்ச்சி
11.Pizza-பொதியப்பம்
12.Somas-பிறைமடி
13.Chips-சீவல்
14.Noodles-இழையுணவு
15.Jelly-உறைகூழ்
16.Sweet corn-இனிப்புச் சோளம்
17.Bread-அப்பம்
18.Chapati-கோதடை
19.Icecream-பனிக்கூழ்
20.Biscuit-மாச்சில்
21.Cake-வெட்டப்பம்
22.Rusk-வறளப்பம்
23.Burger-ஊன்பொதியப்பம்
24.Samosa-கறிப்பொதி
25.Puffs-திணியடை

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2052 - ஆடி
ஆகத்துத் திங்கள் 2021

ஆசிரியர் : **தங்க.காமராசு**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



## ஆசிரியர் பேசுகிறார்

# கோட்டையில் தமிழ் மணக்கிறது!



“தி.மு.க.வின் ஆட்சி அமையும் காலங்களில் மட்டுமே கவனம் பெற்றுவரும் மற்றொரு மகத்தான பணி ‘செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி’யை உருவாக்கிடும் பெருமைக்குரிய பணி” என்று ‘முத்தமிழ் அறிஞர்’ கலைஞர் அவர்கள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் ‘இரண்டாம் மடலத்தின் (‘க’ மடலம்) முதற்பாகத்திற்கான அணிந்துரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

தமிழ்மொழிப் பாதுகாப்பிற்கு ஒரு தனி இயக்ககம் தேவையென்பதை ஆழமாக உணர்ந்த கலைஞர் அவர்கள், அந்தக் காலக்கட்டத்தில் தமிழ்வளர்ச்சித்துறை மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் போன்ற பெரிய அரசு அமைப்புகள் இயங்கிக் கொண்டிருந்தபோதே 1974ஆம் ஆண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தைத் தனியாகத் தோற்றுவித்தார்கள்.

தாய்மொழி மீது கலைருக்கு இருந்த அக்கறையையும், தொலைநோக்குச் சிந்தனையையும் அறிஞர்கள் வெகுவாகப் பாராட்டினார்கள். தமிழ்மொழியின் வேர்ச்சொற்களை ஆய்வுசெய்து, அதன்வழியாக அந்தச் சொற்களில் புதைந்து கிடக்கின்ற தமிழர்களின் பழைமையான வரலாறு, தமிழ்மொழியின் தொன்மை ஆகியவற்றை உலகத்திற்கு வெளிப்படுத்த கலைஞர் அவர்கள் ‘மொழிஞாயிறு’ ஞா.தேவநேயப் பாவாணர் அவர்களை அகரமுதலி இயக்ககத்திற்கு முதல் இயக்குநராக அமர்த்தினார்.

தேவநேயப் பாவாணர் அவர்கள் தமிழ்ச் சொற்களையெல்லாம் திரட்டி சொற்பிறப்பியல் அகராதியாக வெளியிட்டபிறகு இந்தத் திட்டம் கைவிடப்படும் என்று அன்றைய முதல்வர் கலைஞர் அவர்களோ, மற்ற உயர் அலுவலர்களோ எந்த நிலையிலும் குறிப்பிடவில்லை. ‘அகராதிப் பணி’ என்பது மொழி உள்ளவரை தொடர்ந்து நடைபெற வேண்டிய முகாமையான பணி என்பதை கலைஞர் அவர்களும், அறிஞர்களும், உயர் அலுவலர்களும் ஆழமாக அறிந்திருந்தார்கள்.

அதனால்தான் இந்த அகரமுதலித் திட்ட இயக்ககமானது பல்வேறு இடர்ப்பாடுகள், தாக்குதல்கள் ஆகியவற்றையெல்லாம் தாங்கி இதுவரை தாக்குப்பிடித்து நிலைத்து நிற்கிறது.

ஒரு மொழி வளர்ச்சிக்கு அகராதிகளின் பங்கு எத்தகையது என்பதனை அந்த மொழியைப் பேசுகின்ற அத்தனை பேரும் தெரிந்திருக்க வேண்டும். அன்னைத் தமிழுக்கு ஆணிவேரே அகரமுதலிகள்தான் என்பதையும், அகரமுதலிப் பணிகளே அத்தனை மொழிப் பணிகளுக்கும் முதன்மையான பணி என்பதையும் தமிழ் இலக்கியம் படிக்கத் தொடங்கிய காலத்திலேயே உணர்ந்தவர்களில் நானும் ஒருவன்.

“அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு” என்றும், “எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்” என்றும் வள்ளுவர் மொழிக்குத் தேவையானவை எவை என்பதை உணராமலா எழுதியிருப்பார். அதனால்தான் பாரதி, “சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே, அதை தொழுது படித்திடடி பாப்பா” என்று தமிழ்ச்சொற்களைத் தொழ வலியுறுத்தினார்.



கற்கோட்டைகளைக் கட்டி ஆண்ட பல மன்னர்களை நமக்குத் தெரியாது. ஆனால், சொற்கோட்டை கட்டி தமிழ் வளர்த்த கம்பனும், இளங்கோவும், வள்ளுவரும், இன்னும் பல சங்கப்புலவர்களும்



இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். “தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை” என்பதை அவர்களுடைய புகழ் நமக்கு விளக்குகிறது.

தமிழுக்குத் தொண்டு செய்ய நினைப்பவர்கள் தொடர்ந்து தமிழ்ப் பணியைச் செய்துகொண்டே இருக்க வேண்டும். அப்பணிக்காக எந்தவித எதிர்பார்ப்புகளும் இருக்கக்கூடாது. அது தாய்மொழிக்கான அர்ப்பணிப்புப் பணியாக இருக்க வேண்டும்.

படைப்பாளிகளின் எழுத்துகளில் தூய தமிழ்ச்சொற்கள் கொஞ்சி விளையாடி படிப்பவர்களை மகிழ்விக்க வேண்டும். மறைமலை அடிகளார், பாவாணர், பெருஞ்சித்திரனார், குன்றக்குடி அடிகளார் போன்ற பல தமிழ்மொழி அறிஞர்கள் தமிழைக் காக்க நமது சொற்களைக் காப்பாற்றுங்கள் என்று தொடர்ந்து வலியுறுத்தி வந்தார்கள்.

அதன் நீட்சியாகத்தான், அத்தகைய தகைசால் தமிழறிஞர்களின் எண்ணங்களை ஈடேற்றும்





வகையில்தான் இன்றும் அகரமுதலி இயக்ககம் வழியாக தமிழ்நாடு அரசு மக்களுக்கு அறிவுறுத்திக் கொண்டிருக்கிறது.

தூயதமிழ்ச் சொற்களைப் புழக்கத்திற்குக் கொண்டு வரும் தமிழ்ப் பற்றாளர்களை ஊக்கப்படுத்த பல்வேறு விருதுகளையும், பரிசுகளையும் அகரமுதலி இயக்ககம் வழியாக அரசு அள்ளி அள்ளி வழங்கிக் கொண்டிருக் கிறது.

கலைஞர் அவர்கள் என்ன நோக்கத்திற்காக இந்த இயக்ககத்தைத் தோற்றுவித்தார்கள்? 47 ஆண்டுகளாக இவ்வியக்ககம் எத்தகைய பணியை மேற்கொண்டிருந்தது? இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறது? என்பதையெல்லாம் தமிழர்கள் அனைவரும் தெரிந்திருக்க வேண்டும்,

குறிப்பாக இளந்தலைமுறை மாணவச் செல்வங்களுக்கு இவ்வியக்ககப் பணிகள், அகராதிகள், தூயதமிழ் போன்றவற்றைப் பற்றிய விழிப்புணர்வு ஏற்பட வேண்டும்.

அதற்காகத்தான் இவ்வியக்ககம் பள்ளி, கல்லூரி மாணவர்களோடு தன்னை இணைத்துக் கொண்டு புதுப்பொலிவுடனும், இளமையுடனும் மலர்ச்சி பெற்று வருகிறது என்பதை இங்குப் பதிவு செய்வதில் நான் பெருமைகொள்கிறேன்.

அகரமுதலி இயக்ககம் இன்று பல ஆயிரக்கணக்கான மாணவர்களாலும், இல்ல மகளிராலும் சூழப்பட்ட ஒரு இயக்ககமாக மாறியதற்குக் காரணம் இருக்கிறது.

கடந்த ஆண்டு எத்திராசு மகளிர் கல்லூரியில் மதிப்பிற்குரிய முனைவர் வெ. இறையன்பு இ.ஆ.ப., அவர்களின் உரை வீச்சும், சென்னை, டாக்டர் எம்.ஜி.ஆர். மருத்துவக் கல்லூரியில் மதிப்பிற்குரிய திரு. த.உதயச்சந்திரன் இ.ஆ.ப., அவர்கள் ஆற்றிய எழுச்சி உரையும்தான் மொழிவளர்ச்சிக்கு அகராதிகளின் தேவை என்ன என்பதை மாணவர்களை உணர வைத்து, இன்று ஒரு பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

இக்காலச் சூழ்நிலை தமிழருக்கு மட்டுமல்ல, தமிழ்மொழிக்கும் ஏற்றதாக அமைந்திருக்கிறது என்பதை மாண்புமிகு தமிழ்வளர்ச்சித்துறை அமைச்சர் திரு. தங்கம் தென்னரசு அவர்கள் அகழாய்வுச் செய்திகளின் வாயிலாகத் தெளிவான விளக்கங்களைக் கூறி உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

ஒரு பக்கம் தமிழ்மொழியையே மூச்சாகக் கொண்டு ஆட்சிபுரியும் மாண்புமிகு முதலமைச்சர் திரு. மு.க. ஸ்டாலின் அவர்கள், பட்டறிவும் படிப்பறிவும் மிக்க தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் திரு. தங்கம் தென்னரசு அவர்கள், இன்னொரு பக்கம் தமிழ் வழியில் இந்திய ஆட்சிப் பணிக்கு வந்த அலுவல் அறிஞர்களான தலைமைச் செயலாளர் முனைவர் வெ. இறையன்பு இ.ஆ.ப. உள்ளிட்ட பல உயர் பதவிகளை வகிப்பவர்கள் எனக் கோட்டைக் கொத்தளத்தில் எல்லா இடங்களிலும் தமிழ் மணக்கிறது.

கோட்டையிலே கொடி ஏற்றியது போல ‘தமிழ் வாழ்க’ என்ற மகுடம் ஏற்றப்பட்டிருக்கிறது. அரசாணைகள் அனைத்தும் தமிழாக மாறி வருகின்றன.

தமிழ் படித்தவர்களுக்கு நாட்டிலும் வீட்டிலும் மதிப்பும் சிறப்பும் அதிகரித்து வருகிறது. கடந்த ஆண்டுகளைவிட தமிழ்வழிப் பள்ளிகளில் சேர்க்கை விழுக்காடு அதிகரித்துள்ளது.

தமிழ்நாட்டின் தலைமைச் செயலாளரே ‘அன்புத் தோழர்களே’! எனத் தன் கைப்பட தமிழில் மடல் எழுதி அரசுப் பணியாளர்களுக்குச் சுற்றுக்கு அனுப்பி தமிழ் வளர்க் கிறார்.

எது எப்படியோ தமிழ்மொழி வளர்ச்சி என்பது அகரமுதலி என்ற ஆணிவேரிலிருந்துதான் தொடங்குகிறது என்பதை ஒவ்வொரு தமிழரும் உணரத் தொடங்கியிருக் கிறார்கள்.

**மீண்டும் சந்திப்போம்**

# அறிய வேண்டிய அரிய செய்தி -15

## தமிழ் மக்களும் தண்ணீரும்

இயற்கை என்பது உயிரினங்களுக்குக் கிடைத்த பெரும்பேறு. உயர்ந்தோங்கிய மலைகள், காடுகள், பசுமைப்புல்வெளிகள், நீர்நிலைகள், வயல்வெளிகள் என இயற்கையின் கொடைகள் கணக்கிலடங்காதவை. அவற்றை உரியவகையில் பயன்படுத்தியும் பாதுகாத்தும் அடுத்த தலைமுறையினருக்கு அளிப்பது நமது பொறுப்பு. நீரின் தேவைகளை உணர்ந்தே ஆகவேண்டிய காலக்கட்டம் இது.

நீரின் சிறப்பை அறிந்துதான் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னமே 'வான்சிறப்பு' என்னும் அதிகாரத்தில் பத்துக்குறட்பாக்களைப் படைத்தார் திருவள்ளுவர். நீரே உயிரின வாழ்வின் அடித்தளம் என்பதை உணர்த்தவே

**நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்**
**வானின் றமையா தொழுக்கு**

**(குறள். 20)**

என்றார் வள்ளுவர். அக்குறளுக்கேற்ப நம் முன்னோர்களும் நீர்நிலை வடிவங்களை உருவாக்கி நீரைப் பாதுகாத்தனர். மழையே பயிர்க்கூட்டமும் உயிர்க்கூட்டமும் மகிழ்ச்சியாக உயிர் வாழப்பெருந்துணை புரிகின்றது. விதைத்த விதை நீராலேயே வளமாக வளர்கிறது.

தமிழக வரலாற்றில் பல நூற்றாண்டுகளுக்குமுன் கரிகாற்சோழன் காலத்தில் கட்டப்பட்ட கல்லணையே விரிவான பாசனத்திட்டமாக இருந்துள்ளது. அக்கல்லணை கட்டுமானத் தொழில்நுட்பத்தால் இன்றும் பயன்படுவதோடு நமது வரலாற்றுப் பெருமைக்கும் சான்றாக நிலைத்து நிற்கிறது.

**"மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்**
**காடும் உடையது அரண்"**

**(குறள். 742)**

என்னும் குறட்பாவில் நாட்டின் தலைசிறந்த அரண்களுள் நீருக்கே முதலிடம் தருகிறார் திருவள்ளுவர். "உணவெனப்படுவது நிலத்தொடு நீரே" (புறம். 18:21) என்னும் புறநானூற்றுப்பாடல்வரி நீரின் இன்றியமையாமையை எடுத்துரைக்கிறது.

நாம் வாழும் தமிழ்நாடு வெப்பமண்டலப் பகுதியில் உள்ளது. எனவே நீர்சார்ந்த தன்னுணர்ச்சி தமிழக மக்களுக்கு மிகுதி. இதனடிப்படையில் தோன்றியதுதான் "தாயைப்பழித்தாலும் தண்ணீரைப்பழிக்காதே" என்னும் சொலவடை வழக்கு.

தமிழ் மரபில் நீரும் நீராடலும் வாழ்வியலோடு பிணைக்கப்பட்டவையாக விளங்குகின்றன என்பார் பேராசிரியர் தொ. பரமசிவன். 'குளித்தல்' என்னும் சொல்குறித்துக் கூறும்போது, "குளித்தல் என்ற சொல்லுக்கு உடம்பினைத் தூய்மைசெய்தல் (அ) அழுக்கு நீக்குதல் என்பதே பொருளாகும். குளிர்த்தல் என்பதே குளித்தல் என்றாயிற்று" என்று விளக்கியுள்ளார்.

"குள்ளக் குளிரக்குடைந்து நீராடாதே" என்ற ஆண்டாளின் திருப்பாவை அடியும் இக்கருத்துக்கு அரண் சேர்க்கிறது. விளக்கின் வெப்ப ஒளியைக் குறைப்பதையே குளிர வைத்தல் என்பர். தெய்வச்சிலைகளைக் குளி(ர்)க்க வைப்பதைத் 'திருமஞ்சனம் ஆடல்' என்று கூறுவர். சிற்றிலக்கியமாகிய பிள்ளைத் தமிழில் நீராடல்பருவம் என்று ஒரு பருவம் உண்டு. திருமணமான பின் கடலாடுதல் என்னும் வழக்கமும் தமிழகத்தில் நிலவுகிறது. இறப்புச்சடங்கிலும் உடலை நீராட்டுவதற்காக "நீர்மாலை" எடுத்துவருதல் நடைமுறையில் உள்ளது. அம்மைநோய் வந்து குணமடைந்தபின் தண்ணீர் ஊற்றியாகிவிட்டதா? எனக்கேட்பது வழக்கம். வாரம்தோறும் நல்லெண்ணெய் தேய்த்துக் குளிப்பதைத் தமிழர்கள் மரபாக வைத்திருந்ததால் "சனி நீராடு" என்பது ஔவையின் அறிவுரையாகத் தோன்றியது. பூப்படைந்த பெண்ணிற்கு நீர் ஊற்றுவதை 'மஞ்சள் நீராட்டு' என்றும் அழைத்தனர். வீட்டிற்கு வரும் விருந்தினர்க்கு அன்பான வரவேற்பின் அடையாளமாக நீரே வழங்கப்படுகிறது. அதிகாலையில் நிலத்தில் உழைக்கச் செல்வோர் நீராகாரம்தான் குடிப்பார்கள். இவ்வாறு தமிழக மக்களின் குடும்பம் தொடங்கி குமுகாயம் வரை அனைத்திலும் தண்ணீர் முகாமையான பங்காற்றுகிறது.

தமிழகத்தில் காணப்படும் நீர்நிலைப் பெயர்களும் விளக்கமும்:

- **கோட்டையின் புறத்தே அகழ்ந்தமைக்கப்பட்ட நீர் அரண் அகழி**
- **மலைமுகட்டுத் தேக்கநீர் குத்திட்டுக் குதிப்பது அருவி.**
- **கடலருகே தோண்டிக்கட்டிய கிணறு ஆழிக்கிணறு.**
- **பெருகி ஓடும் நீர் ஆறு**
- **ஏரி, குளம் போன்ற நீர்தேக்கம் இலஞ்சி**
- **மணற்பாங்கான இடத்தில் தோண்டிச் சுடுமண் வளையமிட்ட கிணறு உறைக்கிணறு.**
- **மக்கள் பருகுநீர்உள்ள நீர்நிலை ஊருணி.**
- **வேளாண்மைப் பாசன நீர்த்தேக்கம் ஏரி.**
- **சரளை நிலத்தில் கல், செங்கற்களால் சுவர் கட்டிய கிணறு கட்டுக்கிணறு.**
- **பாண்டி மண்டலத்தில் ஏரிக்கு வழங்கும் பெயர் கண்மாய்.**
- **சிறியதாய் அமைந்த குளிக்கும் நீர்நிலை குண்டம்.**
- **அடிநிலத்து நீர் கொப்புளித்துவரும் ஊற்று குமிழி ஊற்று.**
- **உவர்மண் நிலத்தில் தோண்டப்படும் நீர்நிலை கூவல்**
- **அகலமும் ஆழமும் உள்ள பெருங்கிணறு கேணி.**

உணவு உற்பத்திக்கு மட்டுமின்றி நீரே உணவாகவும் இருக்கிறது என்பதை உணர்த்த

**"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்**
**துப்பாய தூஉம் மழை"**

**(குறள். 12)**

என்று திருவள்ளுவர் கூறியதைக் கருத்தில் கொண்டு நீர்வளம் காத்துச் செயல்படுவோம்.

**ஜெ.சாந்தி**
தொகுப்பாளர் அகரமுதலி இயக்ககம்

# வாழும்போதே வாழ்த்துவோம் !

## வேர்களைத் தேடும் விழுதுகள்

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வழிகாட்டுதலின் அடிப்படையில், வேலூர் செந்தமிழ்த் திருத்தேர் அமைப்பின் சார்பில், அகவை முதிர்ந்த தமிழறிஞர்களைத் தேடிச்சென்று சிறப்பிக்கும் "வாழும்போதே வாழ்த்துவோம்" என்ற திட்டம் 21.07.2021ஆம் நாள் சென்னை அண்ணாநகரில் தொடங்கப்பட்டது.**

இத்திட்டத்தின் தொடக்க நிகழ்வில், அகரமுதலி இயக்கக இயக்குநர் திரு. தங்க.காமராசு அவர்கள் தலைமையேற்க, தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் முனைவர் கோ.பாலசுப்ரமணியன் அவர்கள் திட்டத்தினைத் தொடங்கி வைத்துச் சிறப்புரை யாற்றினார்.

சென்னை அண்ணாநகரைச் சேர்ந்த வேர்ச்சொல்லாய்வாளரும் மொழியியலாளருமான முனைவர் கிருசுணன் இராமசாமி அவர்களுக்குத் தமிழ்ச் சான்றோர் முன்னிலையில் மாணவர்கள் சார்பில் பாராட்டுப் பட்டயம் வழங்கிச் சிறப்பிக்கப்பட்டது.

இந்நிகழ்வில் சென்னை அமிழ்தத்தமிழ் ஆய்வரங்கத்தின் தலைவர் முனைவர் இளவரச அமிழ்தன் அவர்கள் முன்னிலை வகிக்க, அண்ணாநகர் தமிழ்ச்சங்கத்தின் புரவலரான திரு. த.கு.திவாகரன், கல்லைத் தமிழ்ச்சங்கத்தினைச் சேர்ந்த நற்றமிழ் செ.வ.இராமானுசம், நான் ஓர் இ.ஆ.ப. அகாதெமியின் இயக்குநர் திரு. தமிழ் இயலன், கோவை இன்தமிழ் இல்லத்தரசிகள் சங்கத்தின் ஒருங்கினைப்பாளர்





முனைவர் அ.ஷர்மிளா பானு ஆகியோர் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தனர்.

செந்தமிழ்த் திருத்தேரின் இயக்குநரான செல்வன். ச.திவாகர் நோக்கவுரை வழங்கிட, நிகழ்வின் நிறைவில் தமிழறிஞர் முனைவர் கிருசுணன் இராமசாமி அவர்கள் மாணவர்களின் பாராட்டினை ஏற்று ஏற்புரை வழங்கினார்.

அவர் தனது ஏற்புரையில், ” வாழும்போதே வாழ்த்துவோம் என்ற திட்டத்தின்கீழ் வேர்களைத் தேடும் விழுதுகள்போல் செயலாற்றும் மாணவர்கள் சார்பில் தமிழ்ச்சான்றோர்கள் முன்னிலையில் பாராட்டிச் சிறப்பிக்கப்படுவதைப் பெருமிதமாகக் கருதுவதாகவும், தமிழ்மொழியினை அடுத்த தலைமுறையினரிடம் கொண்டுசெல்ல மாணவர்களோடு இணைவதற்கு இதனை ஒரு நல்வாய்ப்பாகக் கருதுவதாகவும், இப்பாராட்டு மென்மேலும் தமிழ்த்தொண்டாற்றிட ஊக்கமளிப்பதாகவும்” தெரிவித்தார்.

மேலும், “தமிழ்மொழியினைக் கொண்டாடுவதைவிட மொழியின் வளர்ச்சிக்கான ஆக்கப்பணிகளில் இன்றைய இளைஞர்கள் தங்களை முழுமையாக ஈடுபத்திக்கொள்ள வேண்டும். தமிழ்மொழியின் தேவையை அனைத்துத் துறைகளிலும் ஏற்படுத்தினால் தமிழ்படித்த இளைஞர்களுக்கான வேலைவாய்ப்புகளை உறுதிப்படுத்தலாம். குறிப்பாக வணிக நிறுவனங்களில் தமிழ்மொழியினுடைய பயன்பாட்டினை அதிகரிக்க வேண்டும்.

நமது நாட்டில் விற்கப்படும் பல வெளிநாட்டுப் பொருட்களின் வழிக்காட்டிக் கையேடுகள் ஆங்கிலம், இந்தி, சீனம், ஸ்பானிஷ் போன்ற அயல்மொழிகளில் மட்டுமே இருக்கின்றன. இருப்பினும் நாம் அதைப் பொருட்படுத்தாமல் வாங்கிக்கொண்டிருக்கிறோம். நமது தமிழ்மொழியின் தேவையை வலியுறுத்தி தமிழும் இடம்பெற்றால்தான் பொருட்களை வாங்குவோம் என்ற நிலைப்பாட்டில் உறுதியாக இருந்தால் கண்டிப்பாகத் தமிழ்மொழியினையும் இடம்பெறச் செய்யலாம்” என்று கூறினார்.

செந்தமிழ்த் திருத்தேரின் மாநில ஒருங்கிணைப்பாளரான செல்வன் ம.ஜ.சந்தீப் அவர்கள் தொகுப்புரை வழங்க, செந்தமிழ்த்திருத்தேரின் மாநில ஒருங்கிணைப்பாளர்களான செல்வன் சா.செல்வகுமார், செல்வன் இ.நேரு ஆகியோர் முறையே வரவேற்புரையும் நன்றியுரையும் வழங்கினர்.

மண்ணுக்குள் மறைந்து ஊன்றி மரத்தினைத் தாங்கிப் பிடிக்கும் வேர்களைப்போல, கண்ணுக்குள் கருவிழிபோல, தமிழுக்காக அரும்பணியாற்றிக் குடத்துக்குள் விளக்காய் வாழும் அகவை முதிர்ந்த தமிழறிஞர்களின் பெருமையினைக் குன்றின்மேல் விளக்காய் ஒளிரச் செய்யும் வகையில், இனிவரும் காலங்களில் மாண்பமை தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் அவர்களின் அறிவுறுத்தலின்படியும், தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வழிகாட்டுதலின்படியும் தமிழ்நாடு முழுவதும் உள்ள செந்தமிழ்த் திருத்தேர் மாணவர்களைக் கொண்டு முறையான குழு அமைக்கப்பட்டு இத்திட்டம் செயல்படவுள்ளதாகச் செந்தமிழ்த் திருத்தேர் அமைப்பின் சார்பில் தெரிவிக்கப் பட்டுள்ளது.




# கணித்தமிழ் வளர்ச்சி

**நீச்சல்காரன்** தமிழ்நாடு முதலமைச்சர் கணினித்தமிழ் விருதாளர்

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழை அடுத்து கணித்தமிழ் என்பது நான்காம் தமிழாகவும் புதுமைத் தமிழாகவும் உள்ளது. கணினி என்ற ஊடகம் என்பதால் மட்டும் இது முதன்மை பெறவில்லை. அச்சு ஊடகம், காட்சி ஊடகம் போன்றில்லாமல் கணினி என்ற ஊடகம், செய்யறிவு என்ற புதிய திறனைப் பெறுகிறது. அதனாலேயே கணித்தமிழை வளர்க்க வேண்டிய பொறுப்பு நமக்குள்ளது. புள்ளிவிவரங்களின் படி இணையத்தில் 0.1 விழுக்காட்டிற்கும் கீழ்தான் தமிழ்மொழி இணையத்தில் உள்ளது. பயன்பாட்டளவில் உரையாடல் செயலிகள், இணையக் காட்சியூடகம், சமூகத்தளங்கள், இணையச் செய்தித் தளங்கள் போன்றவற்றைத்தான் அதிகமாக இணையத்தில் மக்கள் பயன்படுத்துகின்றனர். இவற்றில் தமிழ்ப் பயன்பாட்டினை உறுதி செய்வது இன்றியமையாதது. கணித்தமிழ் வளர்ச்சி என்பது தமிழ் வளர்ச்சி மட்டுமல்லாமல் தொழில்நுட்ப வளர்ச்சியையும் கொண்டுள்ளது. இணைய வளர்ச்சியையும் கணினிநுட்ப வளர்ச்சியையும் ஒருசேர இணைத்து, தமிழ் வளர்ச்சிப் புள்ளியில் இணைப்பது கணித்தமிழாகும்.



### தமிழ் இணையதளங்கள்

பொதுவாக, தமிழ் இணையதளங்களின் பரவலை நுட்ப அடிப்படையில் பார்த்தால் 61% வலைப்பதிவர் (Blogger) தளங்களாகவும், 13% வேர்ட்பிரஸ் (Wordpress) தளங்களாகவும், 25% இதர வகையினதாகவும் உள்ளன. அலெக்சா தரவரிசைப்படி தமிழ் உள்ள இணையதளங்களைப் பட்டியலிட்டால் முறையே கூகுள், பேஸ்புக், விக்கிப்பீடியா, டுவிட்டர், பிபிசி போன்றவை 1, 7, 13, 39, 102 ஆகிய இடங்களில் உலகளவில் வருகின்றன. தமிழ்ச் செய்தித்தளங்களின் தரவரிசைப்படி தினத்தந்தி, சினியுலகம், தமிழ்வின், தினமலர், ஐபிசிதமிழ் போன்றவை உலகளவில் முதல் பத்தாயிரம் இடத்திற்குள் வருகின்றன. இந்தியச் செய்தித் தளங்களைவிட இலங்கைத் தளங்கள் தரவரிசையில் முன்னிலை வகிக்கின்றன. சமூகத் தளங்களுக்குப் பிறகு அதிகம் செய்தித் தளங்களே தமிழைப் பயன்படுத்துகின்றன. திரையுலகம் சார்ந்த செய்திகள் அதிகம் படிக்கப்படுகின்றன. ஜெயமோகன், எஸ். இராமகிருஷ்ணன், சாரு ஆகியோர் தளங்களே முன்னணியில் உள்ள எழுத்தாளர் தளங்களாகும்.

### தமிழ்ப் பயன்பாடு

கணித்தமிழ் வளர்ச்சியில் முதன்மையானது தமிழ்ப் பயன்பாடு. அவ்வகையில் தமிழ் ஒருங்குறி (Unicode) பயன்பாட்டை அரசுத் தளங்களில் உறுதிசெய்ய வேண்டும். பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள் என்று அரசுசார் மற்றும் அரசுசாராத் தளங்களில் தமிழில் இடைமுகம் இருக்கவேண்டும். இணையதளங்கள் பகிர்வு உரிமையுடனும், மாற்றுத்திறனாளிகளுக்கு ஒத்திசைவுடனும்

இருக்கவேண்டும். அது இணையத்தில் தமிழ்ப் பயன்பாட்டைப் பலரிடம் கொண்டு செல்லும்.

### தமிழ்மென்பொருட்கள்

தொல்காப்பியர், இலக்கணத்தைப் பிரித்தது போலவே தமிழ் மென்பொருட்களைப் பிரிக்கமுடியும். எழுத்துருக்கள், குறியாக்க மாற்றிகள், உள்ளீட்டுக் கருவிகள் போன்றவை எழுத்தளவில் இயங்கக்கூடியவை, ஒரு மொழிக்குச் செய்தால் எளிதில் மற்ற மொழிகளுக்கும் மாற்றமுடியும். அகராதிகள், எழுத்துப் பிழைதிருத்திகள், இலக்கணப் பிழைதிருத்திகள், உரை ஒலி மாற்றிகள், ஒலி உரை மாற்றிகள் போன்றவை சொல்லை அடிப்படையாகக் கொண்டவை. சொல்லளவில் கணினியானது புரிந்தால் தான் இவற்றை உருவாக்கமுடியும். மூன்றாவதாகப் பொருளளவில் புரிந்து செய்யக் கூடியவையாக மொழிபெயர்ப்புக் கருவிகள், உரையாடல் தானியங்கிகள், தானியங்கு குரல்வழி விடைகள் போன்றவை அமைகின்றன.

### சிக்கல்களும் தீர்வுகளும்

தட்டச்சர், வடிவமைப்பாளர் போன்றவர்களுக்கு எழுத்துருவின் குறியாக்கம் அறிந்து கொண்டு மாற்றுவதற்கான தொழில்நுட்பம் தெரிந்திருக்க வேண்டும். தமிழ்த் தரவுகளைச் சேமிக்கும் போது உரிய வகையைத் தேர்வு செய்து சேமிக்க வேண்டும். சான்றாக, நோட்பேட், எஸ்.கியூ.எல் போன்ற இடங்களில் இதன் தேவையை உணரமுடியும். யுடிஎப் 8 முறையே சீரான முறையாகும்.

தமிழ் எழுத்தில் உள்ளவற்றைப் பரிமாறும் போது அஸ்கி முறைக்கே மாற்றிக் கருவிகள் செயல்படும், அதனைப் புரிந்துகொண்டு அதற்கேற்ப மேம்பாட்டாளர்கள் கருவிகளை உருவாக்க வேண்டும். தன்மொழியாக்கம், தற்கால இலக்கணம் போன்ற பல்வேறு இடங்களில் சீர்மை இல்லாமல் உள்ளன. அவற்றைத் தரப்படுத்துதல் மூலம் ஆக்கமுடன் பலரும் பயன்படுத்த முன்வருவார்கள்.

### மாணவர்களுக்குக் கணித்தமிழ்

சுட்டுரை, முகநூல் உள்ளிட்ட சமூகத் தளங்களில் தமிழில் தட்டச்சு செய்ய வேண்டும். ஆங்கில எழுத்தில் கட்டாயம் தமிழை எழுதக் கூடாது. காணொளிகளைத் தமிழில் ஒளிப்பதிவு செய்து பல்லூடகப் பயன்பாட்டில் தமிழைக் கொண்டுவர வேண்டும்.

நல்ல தமிழ்க் கட்டுரைகள், நூல்கள் எனத் தமிழ் உள்ளடக்கத்தை அதிகரிக்க விக்கிப்பீடியா போன்ற திட்டங்களில் எழுதலாம். தமிழ் ஒலிக்கோப்புகளைப் பதிவு செய்து பல்வேறு திட்டங்களுக்கு வழங்கலாம்.

இதனால் நல்ல தமிழ் ஒலிப்புமுறை பலரிடம் பரவும், இத்திட்டங்கள் செயல்படுத்தும் ஆய்வுகளுக்குப் பயன்பட்டு ஒலிசார்ந்த தொழில்நுட்பமும் வளரும்.

தொடர்ந்து கணித்தமிழ் சார்ந்த தகவல்களைப் பெற கீழ்க்கண்ட கூகுள் குழுக்களில் பதிவு செய்யலாம்.

tva_kanitamil_valarchi@googlegroups.com <mailto:tva_kanitamil_valarchi@googlegroups.com>;

kanittamiz@googlegroups.com <mailto:kanittamiz@googlegroups.com>;

freetamilcomputing@googlegroups.com <mailto:freetamilcomputing@googlegroups.com>;

தமிழ் சார்ந்த உரையாடல்கள் தொடர்ந்து நடக்கும் கீழ்க்கண்ட முகநூல் குழுக்களிலும் இணையலாம்.

<https://www.facebook.com/groups/col.aayvu>

<https://www.facebook.com/groups/tamilsol>

<https://www.facebook.com/groups/179849046077378>



# அண்மைக்காலச் செய்திகள்!

# தொன்மையான சொற்கள் மற்றும் வட்டார மொழிகளைத் தொகுத்துப் பாதுகாக்க வேண்டும்!

## குடியரசு துணைத்தலைவர் திரு.எம்.வெங்கையா நாயுடு வலியுறுத்தல்!



**தா**ய்மொழிகளைப் பாதுகாப்பது குறித்த காணொலிக் கருத்தரங்கு ஒன்றில் பேசிய மேதகு குடியரசு துணைத்தலைவர் திரு.எம்.வெங்கையா நாயுடு அவர்கள், "ஒருவர் தாய்மொழியைப் புறக்கணித்தால் தமது அடையாளம் மற்றும் தன்மதிப்பை இழக்க நேரிடும். நமது தாய்மொழியைப் பாதுகாப்பதால் மட்டுமே இசை, நடனம், நாடகம், பழக்க வழக்கங்கள், பண்டிகைகள், பாரம்பரிய அறிவு போன்றவற்றைப் பராமரிக்க இயலும்.

தாய்மொழியைப் பாதுகாப்பதற்காக உலகம் முழுவதும் சிறந்த நடைமுறைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. மொழி ஆர்வலர்கள், மொழியியலாளர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்கள் மற்றும் ஊடகத்துறையினர் போன்றவர்கள் அந்த நடைமுறைகளைக் கற்றுக்கொள்ள வேண்டும். பெருவாரியான மக்களைச் சென்றடையும் வகையில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் சார்ந்த சொற்களை இந்திய மொழிகளில் மேம்படுத்த வேண்டும். மொழியின் பாரம்பரியத்தை எதிர்கால சந்ததியினருக்கு எடுத்துச் சொல்வதில் மக்கள் ஒன்றாக இணைந்து குரல் கொடுக்க வேண்டும்.

மொழியை வளப்படுத்துவதில் மொழிபெயர்ப்பு முக்கிய பங்கு வகிக்கிறது. இந்திய மொழிகளில் மொழிபெயர்ப்பின் தரம் மற்றும் எண்ணிக்கையை அதிகரிப்பதற்கும் பழைமையான இலக்கியங்களை இளைஞர்களுக்குப் புரியும் வகையில் பேச்சுவழக்கில் உருவாக்கவும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். கிராமப்புற மொழிகளில் உள்ள அழிந்துவரும் மற்றும் தொன்மையான சொற்கள் மற்றும் பல்வேறு வட்டார மொழிகளைத் தொகுத்து, அவற்றைப் பாதுகாக்க வேண்டும்" என்று வலியுறுத்தினார்.

நன்றி தினமணி நாளிதழ்

# தொழில்நுட்பக் கல்வி உட்பட உயர்கல்விக்குத் தேவையான புதிய கலைச்சொற்களை உருவாக்க வேண்டும்!

## மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அறிவுறுத்தல்!

27.07.2021ஆம் நாள் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின் அவர்களின் தலைமையில், தலைமைச் செயலகத்தில் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறையின் செயற்பாடுகள் குறித்த ஆய்வுக்கூட்டம் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் மாண்புமிகு தொழில்துறை, தமிழ்வளர்ச்சி (ம) தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர் திரு.தங்கம் தென்னரசு, மாண்புமிகு செய்தித்துறை அமைச்சர் திரு.மு.பெ.சாமிநாதன், தலைமைச் செயலாளர் முனைவர் வெ.இறையன்பு இ.ஆ.ப., நிதித்துறை கூடுதல் தலைமைச் செயலாளர் திரு. எஸ்.கிருஷ்ணன் இ.ஆ.ப., முதன்மைச் செயலாளர் திரு.த. உதயச்சந்திரன் இ.ஆ.ப., தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறைச் செயலாளர் திரு.மகேசன் காசிராஜன் இ.ஆ.ப., தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர், செய்தி மக்கள் தொடர்புத்துறை இயக்குநர், தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர், எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறை ஆணையர், உலகத் தமிழ்ச் சங்கம் மதுரை இயக்குநர், செம்மொழி மத்திய தமிழாய்வு நிறுவன இயக்குநர், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்



திட்ட இயக்கக இயக்குநர், மொழிபெயர்ப்புத் துறை இயக்குநர், தமிழ் வளர்ச்சித்துறை இணைச் செயலாளர் உள்ளிட்ட அரசு உயர் அலுவலர்கள் பலர் கலந்து கொண்டனர்.

கூட்டத்தில் ஆய்வுமேற்கொண்ட மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள், தமிழ்மொழி வளர்ச்சிக்குத் தேவையான அனைத்து நடவடிக்கைகளையும் எடுப்பதோடு, அயல்நாடுகளிலும் வெளிமாநிலங்களிலும் வாழும் தமிழர்களிடையே தமிழ்ப் பண்பாட்டினைப் பரவலாக்கும் புதிய முயற்சிகளை, நவீன தொழில்நுட்பங்களைப் பயன்படுத்திச் செயற்படுத்திட வேண்டும் என்று பேசினார்.

இக்கூட்டத்தில், தொழில்நுட்பக் கல்வி உட்பட உயர்கல்விகளுக்குத் தேவையான பல்வேறு புதிய கலைச்சொற்களை உருவாக்குதல், தமிழ்மொழி செம்மொழியாக அறிவிக்கப்பட்ட அக்டோபர் 12ஆம் நாளினைச் செம்மொழித் தமிழ் நாளாக அறிவித்தல், திருக்குறளைத் தேசிய நூலாக அறிவிக்க ஒன்றிய அரசைத் தொடர்ந்து வலியுறுத்தல், உலகெங்கிலும் உள்ள சிறந்த பல்கலைக் கழகங்களில் தமிழ் இருக்கைகளைத் தொடர்ந்து நிறுவுதல், தமிழ்நாட்டில் உள்ள ஒன்றிய அரசு அலுவலகங்கள் மற்றும் வங்கிகளில் தமிழின் பயன்பாட்டினை அதிகரித்தல் குறித்தும் ஆய்வுமேற்கொள்ளப்பட்டது.

நன்றி
தினகரன் நாளிதழ்

# தமிழரின் தொன்மை கி.மு.ஆறாம் நூற்றாண்டுக்கு முந்தையது!

## அமைச்சர் திரு.தங்கம் தென்னரசு பெருமிதம்!

மதுரையில் செய்தியாளர்களிடம் பேசிய, மாண்புமிகு தொழில்கள்துறை, தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் திரு.தங்கம் தென்னரசு அவர்கள், “கீழடி அகழாய்வில் 146 செ.மீ. நிலத்துக்கு அடியில் வெள்ளியிலான முத்திரை பதித்த காசு கிடைத்துள்ளது.

கீழடியில் கிடைத்த பொருட்களால் தமிழரின் தென்மை கி.மு.ஆறாம் நூற்றாண்டுக்கு முந்தையது எனத் தெரியவந்துள்ளது.



அகழாய்வு மூலம் தமிழகத்தில் அகச்சான்று, புறச்சான்று மற்றும் அறிவியல் சான்றுகள் நமக்குக் கிடைத்துவருகின்றன. தமிழகத்தில் நடக்கும் தொல்லியல் ஆய்வுகள் தமிழின் பெருமையை எடுத்துரைக்கின்றன.

தமிழ் நாகரிகத்தின் தொன்மையை, நாம் அடைந்திருக்கக் கூடிய சான்றுகள் வாயிலாக அறிவியல் பூர்வமாகத் தொடர்ந்து நிறுவுவோம்” என்று தெரிவித்துள்ளார்.

நன்றி தினச்சுவடு

# இல்லந்தோறும் இனிய தமிழ் பேசுவோம்!

## (மகளிர் நடத்திய இணையவழிக் கருத்தரங்கம் 9 ஆம் அமர்வு)

**செ**ந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்துடன் கோவை, இன்தமிழ் இல்லத்தரசிகள் சங்கம் இணைந்து நடத்திய ‘இல்லந்தோறும் இனிய தமிழ் பேசுவோம்’ என்ற தலைப்பிலான இணையவழிக் கருத்தரங்கத்தின் 9ஆம் அமர்வு 10.07.2021 ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது.

அமர்வில் கோவை, இன்தமிழ் இல்லத்தரசிகள் சங்க ஒருங்கிணைப்பாளர் முனைவர் அ.ஷர்மிளா பானு அவர்கள் வரவேற்புரை வழங்க, அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திருமதி. ஜெ.சாந்தி அவர்கள் தொடக்கவுரையாற்றினார்.

அமர்வில் ‘உளநலமும் தமிழ் வளமும்’ என்னும் தலைப்பில் கருப்பொருளுரையாற்றிய, கல்வி மற்றும் உளவியல் கலந்தாய்வாளர் செல்வி சோ.உலகம்மாள் அவர்கள் தம் உரையில், “உளவியல் என்பது நமது உணர்வுகள், எண்ணங்கள், செய்யும் செயல்களுடன் தொடர்புடையது. தன்னளவில் முரண்பாடுகள் அற்ற ஒத்திசைவும் சமூக அளவில் நல்லுறவான இணக்கமும் உளநலத்தின் இருபெரும் கூறுகள். பழந்தமிழரிடத்தே உளவியல்சார் சிந்தனைகள் ஒரு துறையாக வளர்ச்சி அடைந்திராத போதும் உளவியல் எண்ணக்கருக்களும், சிந்தனை முயற்சிகளும் இடம்பெற்றிருப்பதனை இலக்கியச் சான்றுகள் மூலம் அறிய முடிகின்றது. பழந்தமிழர்களின் உளவியல் சார்ந்த சிந்தனைகளைத் தேடித் தொகுப்பதன் மூலமாக உளநலமும், தமிழ் வளமும் இணைந்தே வழக்கிலிருக்கும் பல்வேறு உளவியல், ஒழுக்கவியல் பிரச்சினைகளுக்கும் தீர்வு காண முடியும். தொல்காப்பியம் தொடங்கி, தற்கால இலக்கியம் வரை படைப்பாளிகள் உளவியல் சார்ந்த கருத்துகளைத் தொடர்ந்து எழுதி மக்களுக்கு வழிகாட்டி வருகின்றனர். படைப்பு என்பதே ஒரு உளவியல் சார்ந்த இயக்கப்பாடு தான். உளநலமும், தமிழ் வளமும் ஒன்றோடு ஒன்று பின்னிப்பிணைந்ததே” என்று தெரிவித்தார்.


அ.ஷர்மிளா பானு


கா.சரஸ்வதி


சோ.உலகம்மாள்

அவரைத் தொடர்ந்து, ‘தமிழ்மொழியைக் காக்கும் வழிகள்’ என்னும் தலைப்பில் கருப்பொருளுரை யாற்றிய தமிழ்த்துறைத் தலைவர் திருமதி. கா.சரஸ்வதி அவர்கள் தம் உரையில், “குறைந்தபட்சம் பெயர்கூட தமிழில் தாங்காத தமிழர்களைக் கொண்டதாக இச்சமூகம் மாறிவருகிறது. இந்நிலை மாற, அனைத்துத் துறைகளிலும் கட்டாயம் தமிழைப் பயன்படுத்த அரசு வழிசெய்ய வேண்டும். அனைத்துக் கடைகளின் பதாகைகளும் கட்டாயம் தமிழில்தான் வைக்க வேண்டும். திரைப்படம் முழுமையும் தமிழில் இருக்கவும், தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் தமிழ் இல்லையேல் உரிமத்தை விலக்கிக்கொள்ளவும் வகை செய்ய வேண்டும். பள்ளிகளில் ஆசிரியர்கள் மாணவர்களிடம் தாய்மொழியின் உணர்வை ஊட்டிக் கற்பிக்க வேண்டும். பெற்றோர் –ஆசிரியர்– மாணவர் களிடையேயான உரையாடல்கள் தமிழிலேயே இருக்க வேண்டும்.

குழந்தைகளுக்கு உறவுப்பெயர்களைத் தமிழிலேயே சொல்லிப் பழக்க வேண்டும். நூலகத்தைப் பயன்படுத்தக் கற்றுக்கொடுத்து வாசிப்புப் பழக்கத்தை அதிகரிக்க வேண்டும். தமிழைக் காக்க, தமிழ் உணர்வாளர்கள் தமிழையே வாளும் கேடயமுமாகத் தம் கைகளில் ஏந்தவேண்டும்” என்று தெரிவித்தார்.

# தமிழே எனது வாள்! தமிழே எனது கேடயம்!

நர்த்தகி நடராஜ்

**‘இல்லந்தோறும் இனிய தமிழ் பேசுவோம்’ எனும் தலைப்பிலான இணையவழிக் கருத்தரங்கின் 9ஆம் அமர்வில் பங்கேற்ற பத்மஸ்ரீ, கலைமாமணி, தமிழிசை நடனக்கலைஞர் மதிப்புறு முனைவர் நர்த்தகி நடராஜ் அவர்கள் ஆற்றிய சிறப்புரை.**

“நான் அறிந்த தமிழ், எனை வளர்த்த தமிழ், என் கலையைக் கொஞ்சிய தமிழ், என் கலையைத் தழுவிய தமிழ் எனத் தமிழையே உடலாக, உயிராக, உணர்வாக, நினைவாக, பொழிவாக என்னுள் பிணைத்துக்கொண்டேன். தமிழ் அத்துணை உயரத்திற்கு என்னை அரியணை ஏற்றி அழகுபார்த்து மகிழ்வித்தது. இது உண்மை. தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் எத்துணை வரம் பெற்றவர்கள் என்பதைச் சொல்ல ஒண்ணாது.



அதற்கு நானே சான்று. தமிழ்தான் என்னைத் தாங்கிப் பிடித்துக்கொண்டுள்ளது. தமிழிசை நடனக்கலைஞர் என்று என்னை அறிமுகப் படுத்திக்கொள்வதில்தான் நான் உவகை கொள்கிறேன். எங்கள் குடும்பம் நூறாண்டுகளுக்கு முன்பு திண்ணைப் பள்ளிக்கூடத்தின் வழியே தமிழைக் கற்பித்த குடும்பம். அதன் விட்டகுறையோ, தொட்ட குறையோ தமிழ் விழுமியத்தின் சிறப்பு, இனிமை ஆகியவை பல தலைமுறையைக் கடந்து என் தாய்வயிற்றில் பிறந்த என்னை அணைத்துக்கொண்டன. நான் வளமையான ஆண் பிள்ளையாகவோ, பெண் பிள்ளையாகவோ பிறந்திருந்தால் மற்றவர்களைப் போல தமிழ் என்னையும் தழுவிச் சென்றிருக்கும். ஆனால், தமிழ் தன்னைப் படைக்க, தன்னை வெளிப்படுத்திக்கொள்ள ஓர் உயிரைத் தேடி என்னைத் தேர்ந்தெடுத்திருக்கிறது. முத்தமிழ் வளர்த்த மதுரையில், கால் மாறி நடராசப் பெருமான் ஆடிய மதுரையில் பால் மாறி தமிழ் ஆடுவதற்காக ஒரு சீவனைப் படைத்திருக்கிறார். அது நான் தான் என்று நம்புகிறேன். என்னைத் தேர்வு செய்த தமிழ் தன்னை வெளிப்படுத்திக்கொள்ள என்னை ஒரு களமாகப் பயன்படுத்திக்கொண்டது என்பதுதான் உண்மை.

நான் ஒன்றும் தமிழை முழுவதுமாக அறிந்த பெருமாட்டி இல்லை. இன்று நான் தமிழை ஒரு துளியேனும் சுவைத்துப் பார்க்க விழைகிறேன் என்றால் அதற்கு வித்திட்டவர்கள் என் பள்ளிக்கூடத் தமிழாசிரியர்கள்தான்.

திருநங்கை என்பதால் வாழ்வில் எனக்கு எத்தனையோ துன்பங்கள் ஏற்பட்டன. பலர் என்னைக் காட்சிப்பொருளாக, கேலிப்பொருளாகப் பார்த்தார்கள். அத்தகைய சூழல்களிலெல்லாம் நான் மறைந்துகொள்ள, ஒளிந்துகொள்ள, என்னைக் காத்துக்கொள்ள தமிழைக் கேடயமாகப் பயன்படுத்திக்கொண்டேன். அந்தக் கேடயத்தின் மூலம் எனது தன்னம்பிக்கை, உழைப்பு, விடாமுயற்சி ஆகியவற்றைத் தமிழ் எனும் வாள்கொண்டு வீசினேன். அது இருட்டில் பாய்ந்த கத்திதான், இலக்கின்றி பாய்ந்த கத்திதான் . ஆனாலும் சரியான இலக்கில் என்னைக் கொண்டுசேர்த்தாள் என் தமிழ் அன்னை. பெற்ற அன்னை கூட சூழலின் காரணமாக, சமூகத்தின் எள்ளல்களின் காரணமாக என்னைக் கை நழுவவிட ஆர்வமாகத்தான்

இருந்தாள். ஆனால் தமிழன்னை என்னைத் தூக்கி மடியில் அமர்த்திக்கொண்டாள். முத்தமிழின் கூறுகளையும் என்னுள் புதைத்திருக்கும் முத்தமிழின் அரசியான அவள் எப்படி என்னைக் கைவிடுவாள்?

ஆண்பாதி பெண்பாதி என்பதைப் பால் திரிபு என்று கொள்ளாமல் அது பால் ஒருங்கிணைப்பு என்றுகொண்டு எனைப் பாராட்டி, சீராட்டி கலையின் அருள் வழங்கி என்னை உற்சாகப்படுத்தினாள்.

சமூகத்தினர் என்னைக் காட்சிப்பொருளாகப் பார்த்தபோது அதற்காகக் கலங்கி நான் நேரத்தைக் கழிக்கவில்லை. மாறாக, இவர்களுக்கெல்லாம் காட்சிப் பொருளாகத் தெரிகிறேனே உண்மையில் நான் யார்? என்று அறிந்துகொள்ள முற்பட்டேன். பள்ளி இறுதியாண்டுவரை தமிழாசிரியர்களின் அரவணைப்பில் இருந்தேன். அங்குதான்,

"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே"

என்ற இறையனாரின் சங்க இலக்கியப் பாடலைத் திருவிளையாடல் படம் பார்ப்பதற்கு முன்பாகவே இரசித்து, என்னையும் ஒரு தலைவியாக நினைத்துக் கொண்டு, என் கூந்தலிலும் மணம் வீசுகிறதா? அங்கு வண்டு வந்து அமர்கிறதா? என்றெல்லாம் எண்ணி ஒரு தமிழ்க் காதலியாக உலாவரத் தொடங்கினேன்.

என்னையே தேடி நான் படிக்க ஆரம்பித்தபொழுது, எனக்கு மிகுந்த பெருமையுடனான இரத்தினக் கம்பளங்களை விரித்து, தமிழன்னை என்னை வரவேற்றாள். உமையொரு பாகனாக சிவனை வணங்கும் இவர்கள், அரிக்கும் சிவனுக்கும் பிறந்த ஐயப்பன் எனும் ஓர் அவதாரத்தை வணங்கும் இவர்கள், இரத்தமும் சதையுமாக, உடலும் உயிருமாக, உணர்வு தமிழாக இருக்கும் தமிழ்மகள் நம் முன் நிற்கின்றாளே, இவளை நாம் அரவணைக்க வேண்டாமா? என்று சமூகத்தினருக்குத் தோன்றாததால் நான் தமிழைத் தழுவினேன்.

நான் தமிழைத் தேடியபோது எனக்கு முதலில் அகப்பட்டவன் முண்டாசு கவிஞன் பாரதியார். அவர் கண்ணனை ஒரு தாயாகவும், பெண் குழந்தையாகவும், காதலியாகவும் , தன்னை ஒரு காதலியாகவும், கண்ணனைத் தலைவனாகவும் மாறி மாறிப் பாடிய பாடல்களின் மூலம் நாம் பால் என்பதற்குத் தரும் முக்கியத்துவத்தை உடைத்து ஓர் இறைநிலையைக் காட்டினார். அவன், "சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா" என்று கண்ணனைப் பெண்குழந்தையாகப் பாவித்துப் பாராட்டியபோது என் அடிவயிற்றிலும் ஏதோ குளிர்ந்தது. நான் தாயாகிப் போனேன்.

முருகப்பெருமான் மீது காதல்கொண்ட அண்ணாமலை ரெட்டியார் தன்னை ஒரு காதலியாக எண்ணி களிநடனம், கவிநடனம் ஆடியதை விளக்கும் காவடிச் சிந்து பாடல்களுக்கு ஆடும்பொழுது நான் தலைவியாக நாணப்பட்டுக்கொண்டேன். என்னுள் இருந்த காதல் உணர்வுகளெல்லாம் தலைவனைத் தேடத் தொடங்கிற்று. அப்போது தமிழன்னை மெல்ல கண்சிமிட்டிச் சிரித்தாள். ஓ! எனக்குள்ளும் அந்த பரவசத்தை நீ வைத்திருக்கிறாயா? நான் அசையாப் பொருள் இல்லையோ? ஓ! எனக்கும் சுடும், எனக்கும் இனிக்கும், எனக்கும் வலிக்கும் என்பதனைத் தமிழன்னை எனக்கு உணர்த்தினாள்.

இன்னும் கொஞ்சம் நான் மேலேறிப் போனால், இராமலிங்க அடிகளார் 'திருவருட்பா' என்னும் பெரும் அருட்பாவை விரித்து வைத்து, ஈசனையே ஆடுவதற்கு இங்கு வா என் தலைவனே! என்று அழைக்கின்றார். அங்கும் பால் மறந்து தமிழால் அவர் அழைத்தபொழுது அந்தச் சிதம்பரநாதர் சிதம்பரத்தை விட்டு வடலூருக்கு வந்தார். இன்னும் கொஞ்சம் பிடித்து மேலே போனேன். அருணகிரிநாதர் பெருமான் என்ன ஓர் அழகாக,

" காருமரு வும்பெருகு சோலைமரு வுங்கொடிய
காகளம டங்கவு... முழங்கு மதனாலே
காலடர வம்பமளி மேலடர வந்துபொரு
காமன்விடு விஞ்சுகணை... அஞ்சு மலராலே
ஊருமுல கும்பழைய பேருகம்வி ளைந்ததென
ஓரிரவு வந்தெனது... சிந்தை யழியாதே
ஊடியிரு கொங்கைமிசை கூடிவரி வண்டினமு
லாவியக டம்பமலர்... தந்த ருளுவாயே"

என்று முருகப்பெருமானை ஓர் ஆண்கவி காதலியாக வேண்டுகிறார். எனக்கு மிகுந்த பெருமிதத்தைத் தமிழன்னை தந்தாள். நீ காரணத்துடன்தான் மகளே பிறந்திருக்கிறாய்; நீ காரணத்துடன்தான் வளர்ந்திருக்கிறாய்; நீ காரணத்துடன்தான் இந்தக் கலையைக் கையில் எடுத்திருக்கிறாய், புகுந்துசெல். இதே! உன் கையில் தமிழெனும் வாளையும், அதன் சுவையெனும் கேடயத்தையும் கொடுத்திருக்கிறேன் என்று தமிழன்னை எனக்கு ஆணை யிட்டதுபோன்ற ஓர் உணர்வு என்னுள் முழுவதுமாகப் பரவி நிறைந்தது.

இன்னும் நூல்பிடித்துச் சற்று மேலே போனேன். அங்கு, தமிழானது முகலாயர் ஆட்சி, ஆங்கிலேயர் ஆட்சி, மராட்டியர் ஆட்சி, நாயக்க மன்னர்களின் ஆட்சி என்று எத்துணையோ ஆட்சி மாற்றங்களுக்கு உட்பட்டு, அந்த மொழிகளையும் தழுவி, அந்தந்த மொழிகளின் சுவைகளையும் ஆங்காங்கே கொஞ்சம் தன்னுள் தூவிக்கொண்டு, பொன்னிற மான் அதிகப்படியான வண்ணங்களைத் தன்மேல் கொண்டதுபோல் தமிழன்னை அப்போதும் அழகாகக் காட்சி தந்தாள்.

அதிலும் திளைத்து இன்னும் கொஞ்சம் மேலே போனால், ஆழ்வார்களும் நாயன்மார்களும் செய்த பக்தி இலக்கியங்களில் தலைவன் தலைவி கூற்றைத் தமிழன்னை எனக்கு முழுக்க முழுக்க வழங்கி ஒரு பெரும் பரப்பில் என்னை வரவேற்றாள். அங்கு அப்பர் பெருமானின்,

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றேநீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!"

எத்துணை செழுமையான தமிழ். தமிழ் பேசுவதற்கான மொழி மட்டுமல்ல; தமிழ் ஓர் இனத்திற்கான மொழி மட்டுமல்ல; தமிழ் உயிரை உய்விக்கும் மொழி. தமிழின் ஒவ்வொரு எழுத்திலும் என் உயிர் நிலைபெற்று இருந்தது, என் தன்மானம் நிலைபெற்று இருந்தது.

அதேபோல ஆழ்வார்கள் என்னைத் தாங்கிப்பிடித்தார்கள். பன்னிரு ஆழ்வார்களும் அந்தப் பரம்பொருள் ஒன்றுதான் தலைவன், இங்குள்ள அத்துணை உயிர்களும் நாயகிகள்தான், தலைவிகள்தான் என்று மிக அழகான பிரபந்த பாடல்களில் சொன்னார்கள். ஆணடாள் பெருமாட்டியும் பால் மறந்து, தன்னை மறந்து செய்யுள்களால் கண்ணனைத் தழுவியதிலும், திருமங்கையாழ்வாரின் சிறிய திருமடலில்,

"காரார்வரை கொங்கை கண்ணார் கடல் உடுக்கை
சீரார் சுடர்சுட்டி செங்கல் உழி பேர் ஆற்று
பேரார மார்பின் பெரு மாமழை கூந்தல்
நீரார வேலி நில மங்கை என்னும் இப்
பாரோர் சொல பட்ட மூன்று அன்றே"

என்பதுபோன்ற பாடல்களைப் படிக்கும்போதெல்லாம், அழகிய ஓடையில் அழகிய தாமரையில் என்னைத் தாங்கிப் பிடிப்பதுபோல உணர்ந்தேன். எப்படி, சங்கப்பலகை எதிர்வந்து திருவள்ளுவரின் ஏடை ஏற்றுக்கொண்டதோ, நக்கீரரின் சங்கத்தமிழை ஏற்றுக்கொண்டதோ, அதைப்போல இந்த நர்த்தகியையும் தமிழ் ஏற்றுக்கொண்டது.

திருமங்கையாழ்வாரின்மேல் மிகுந்த பற்றுக்கொண்ட நான் இந்த நங்கைக்குத் 'திரு' என்ற அடையைக் கொடுத்துக்கொண்டேன். திருவும் நங்கையும் இணைந்த ஒரு நிலை. நான் என்னைப் பெண்ணாக நினைத்து ஏமாற்றிக்கொண்டு வாழ விரும்பவில்லை.

வேறு எந்த அடையாளங்கள் தரும் எதுவும் என் மனதுக்கு அமைதியைத் தரவில்லை. நான் மார்தட்டிச் சொல்லிக்கொண்டேன், நான் திருவும் நங்கையும் இணைந்த திருநங்கையென்று. அப்பொழுது என்னுள் எழுந்த பெருமிதம் இன்றுவரை அணையவில்லை.

அப்பொழுது என்னுள் எரிய ஆரம்பித்த தமிழ்த்தீ இப்பொழுதும் என்னுள் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருக்கிறது. அப்பொழுது ஆரம்பித்த அந்தப் பேரொளி, இந்த உடல் மக்கினாலும் எனது நடனமாக எனது இசையாக இந்த உலகம் முழுவதும் நிச்சயம் பரவியிருக்கும் என்று என்னால் உணரமுடிகிறது.

அத்துடன் நின்றுவிடவில்லை. கொஞ்சம் மேலேறிச் சென்றால் இருண்டகாலம். வழிதவறி வந்துவிட்டோமோ? இப்போதுவரை தமிழன்னை என்னை வழிநடத்தி வந்தாளே என்று எண்ணியபோது, "கலங்காதே மகளே! இது களப்பிரர் காலம். உன் தமிழைக் கொஞ்சம் அடைத்துவைக்க, அணைத்து வைக்க முயற்சி செய்த காலம்" என்று ஓர் அசரீரி கேட்டது. யார் என்று பார்த்தால் கண்ணகித்தாய். கையில் சிலம்பை ஏந்தியபடி அங்குக் காத்திருக்கிறாள் எனக்காக. மகிழ்ந்து சிலப்பதிகாரத்திற்குள் போனேன்; படித்தேன்; திளைத்தேன். என் காப்பியமாயிற்றே, கேட்கவேண்டுமா? கள் குடித்த குரங்காக மாறினேன். திளைத்தேன்; ஆடினேன்; ஒவ்வொரு எழுத்திலும் நான் கண்ணகியாக உருமாறினேன்; மாதவியாக உருமாறினேன். அங்கு மாதவி ஆடிய ஆடல்களின் வகைகளை ஆய்வு செய்தேன்; அரங்கத்தை ஆய்வுசெய்தேன்; அவள் கூறிய இலக்கணக்கூறுகளை ஆய்வுசெய்தேன்; புரிந்துகொண்டேன். நடனம் எனக்குப் புரிந்தது. அவள் ஆடிய 11 வகை ஆடல்களை அவதானிக்க முற்பட்டேன். அதில் எனக்காகவே காத்திருந்தவள்போல 9ஆவது வகையில் பேடியாடல் என்ற ஒரு கலையை அவள் நிகழ்த்தியிருந்தாள். அந்தக் கலையில் நர்த்தகி நான் மூழ்கிப்போனேன். மன்மதன் எனும் புராண பாத்திரம் தன் மகன் அனிருத்தனுக்காக சோ என்னும் நகரத்தில் தானே பேடியுரு கொண்டு குடக்கூத்து ஆடியதாம். எத்துணை பெருமிதம் அடைந்திருப்பேன். ஆரம்பத்தில் என்னை எள்ளி நகையாடிய சமூகத்தையும், அவர்களுக்கு நான் யார் என்று காட்ட நான் பற்றிக்கொண்ட தமிழ் எங்கு என்னை இட்டுச்சென்றது என்பதையும் நீங்கள் அறிந்துகொள்ள முடியும்.

மெல்ல சங்க இலக்கியத்துக்குள் சென்றேன்; திளைத்தேன். அத்துணை பாடல்களிலும் தலைவனும் தலைவியுமாகச் சுவைத்து மகிழ்ந்தேன். அதிலிருந்து நழுவி தொல்காப்பியத்தைத் தொட்டேன். தொல்காப்பியர் எனக்கு மகுடம் சூட்டினார். வா மகளே! உன் பயணம் நெடியது. நீ பெண்தான் என்று தொல்காப்பியர் கூறினார். தொல்காப்பியர் இவர்களும் பெண்கள்தான் என்று பொருளதிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் வகைப்படுத்திக் கூறினார். அந்தவகையில் நான் என்னை ஒரு முழுமையான பெண்ணாக, மதித்து, தொல்காப்பியர் கூறும் தெய்வப்பெண்ணாக உணர்ந்து இன்று தமிழ்கூறும் நல்லுலகில் ஒரு தமிழிசை நடனக்கலைஞராக, ஓர் இனத்திற்கே 'திருநங்கை' என்று பெயர்சூட்டியவளாக இருக்கிறேன்.

இன்று நீங்கள் நான் ஏதேதோ சாதனை புரிந்ததாகக் கூறுகிறீர்கள். இல்லை.. தமிழன்னை என்னைப் பணித்தது, "இறுதி மூச்சுவரை நீ மாணவி மாத்திரமே, ஒவ்வொரு நொடியும் உனக்குக் கற்றுத்தருவேன், ஒவ்வொரு நொடியும் உனக்கு ஒவ்வொரு அனுபவங்களைக் கொடுப்பேன், உன் கடைசி நொடியில்கூட உனக்கு ஒரு புதிய பாடத்தைக் கொடுத்துத்தான் அனுப்புவேன்" என்று கூறுவதுபோல இன்றும் என் பயணம் ஒரு மாணவியாகத்தான் தொடர்ந்து கொண்டிருக்கிறது.



# நலம்வாழ நாளொரு கீரை!

**மருத்துவர். ச. மேரி ஷர்மிளா**
**(சித்த மருத்துவம்)**
**விரிவுரையாளர் தேசிய சித்த மருத்துவ நிறுவனம்**

தமிழர்களின் சமயம், பண்பாடு, மருத்துவம், பயிரியலறிவு என்பன அவர்களின் வாழ்க்கைமுறையில் ஒன்றிய கூறுகளாகும். அவற்றுள் தமிழ்மக்களின் உணவுமுறை என்பது தனிச்சிறப்புவாய்ந்தது. எளிதில் செரிக்கும் உணவுகளைச் சுவையின் அடிப்படையிலும், உடலுக்கு வலிமைதரும் வகையிலும், எந்த உணவினை எந்தக் காலத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதிலும் கவனம் செலுத்தி உணவுமுறைகளை அமைத்து நலமுடன் வாழ்ந்துவந்தனர். காய்கறி உணவுகள் உடலுக்கு இன்றியமையாதவையாகும்.

அவ்வகையில் அதிக நார்ச்சத்து, புரதம், உயிர்ச்சத்துக்கள் மற்றும் உப்புச்சத்துகளும் உள்ளவை கீரைகள் ஆகும். உயர்ந்த மருத்துவப் பயன்களை உடைய கீரைகளை நாம் உணவில் சேர்த்துக்கொண்டால், உடலுக்கு அதிக வலிமையும், பல நன்மைகளும் உண்டாகும். தமிழ்வாழ்வியலில் ‘‘உணவே மருந்து’’ என்னும் கொள்கையும், ’’நோயினை வரும்முன் காப்போம்’’ எனும் சித்த மருத்துவக் கொள்கையும் ஒன்றுக்கொன்று பிரிக்க இயலாதவாறு பிணைந்தே இருக்கின்றன.

நம்முன்னோர்கள் நூற்றுக்கும் மேற்பட்ட கீரை வகைகளை உணவில் சேர்த்து, அவற்றின் மருத்துவப் பயன்களை உணர்ந்தும், உண்டும் நலமாக வாழ்ந்தனர். இன்றோ நடைமுறையில் நமக்குக் கிடைப்பவை சில வகைக் கீரைகளே ஆகும், அவைகளையே நாம் மாற்றிமாற்றிப் பயன்படுத்திக்கொண்டு இருக்கிறோம். இன்னும் நாம் அறிந்திடாத, பயன்படுத்திடாத கீரை வகைகள் நிறைய உண்டு. அவைகளின் பயன்களை அறிந்து, அவற்றின் நன்மைகளைச் சுவைத்து, அந்த அறிவினை நமது அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்லும் கடமையும் நமக்கு உண்டு.

கீரைகளில் இரும்புச்சத்து, உயிர்ச்சத்து சி, கெ, எ, கால்சியம், பாஸ்பரஸ், மக்னீசியம், பொட்டாசியம் ஆகிய சத்துகள் அதிகமாகக் காணப்படுகின்றன. நார்ச்சத்து அதிகம் நிறைந்த கீரைகள் குடலை மென்மையாக இளக்குவதுமின்றி



**கீரைகள் காயகற்ப உணவுகள் ஆகும், அதாவது உடலைக் கல் போல் ஆக்கவும், நீண்டகாலம் நலமுடன் வாழவும் உதவுகின்றன.**

, புற்றுநோய் ஏற்படாமலும் பாதுகாக்கின்றன.

கொழுப்புச்சத்து இல்லாத, ஊட்டச் சத்துமிக்க கீரைகளை எடுத்துக்கொள்வதால், உடல் எடையைக் குறைக்க இயலும்.

கீரைகளை உணவில் தொடர்ந்து சேர்த்துக் கொள்வதால் நமது நோயெதிர்ப்புத் திறன் அதிகரிக்கும், தலைமுடி கருகரு வென்றும் வளமாகவும் வளரும். கீரைகளைப் பெரும்பாலும் குழம்பு, கடையல், பொரியல், கூட்டு, வடை, அடை, சட்டினி, தோசை, ஊறுகாய் முதலிய உணவுபாக முறைகளில் சமைப்பது வழக்கத்தில் உள்ளது.

ஐம்பொறிகளில் சிறப்பானது கண்களாகும். கண்கள் மூலமே நாம் உலகை அதிகம் உணர்கிறோம். அத்தகைய கண்களுக்குச் சிறந்த உணவாக அறியப்படும் கேரட்டை விட நம் நாட்டுக் கீரைவகைகளில் அதிக சத்துகள் உள்ளன. கீரைகள் கண்களின் பார்வைக்கு நல்ல மருந்தாகவும், உணவாகவும் அமைகின்றன.

முருங்கைக்கீரை, பொன்னாங்கண்ணி, சிறுகீரை முதலியவை கண்களுக்குக் குளிர்ச்சி அளித்து, பார்வைக்குறைபாடு ஏற்படாமல் பாதுகாக்கின்றன. அண்மைக் காலமாக அதிகரித்துக் காணப்படுகின்ற குழந்தைகளின் பார்வைக் குறைவை இவ்வகைக் கீரைகளை உணவில் சேர்த்துக் கொள்வதால் தவிர்க்கலாம்.



மருத்துவர். ச. மேரி ஷர்மிளா

இரத்தசோகை நோயில் காணப்படுகின்ற ஊட்டச்சத்துக் குறைபாட்டினைக் கீரைகள் சரிசெய்து, குருதியைத் தூய்மையாக்குகின்றன.

வெந்தயக்கீரை, தண்டுக்கீரை, கொத்தமல்லி, முருங்கை ஆகியவற்றில் அதிக இரும்புச்சத்து, வைட்டமின் சி இருப்பதினால் பெண்கள் மற்றும் குழந்தைகளிடம் காணும் இரத்தசோகை நோயினைக் குணப்படுத்தவும், குருதியில் உள்ள இரத்த சிவப்பணுக்களை அதிகரிக்கவும் உதவுகிறது.

நம் நாட்டில் பெரும்பான்மை பெண்கள் மற்றும் மாதவிடாய் நின்ற மகளிருக்கு கால்சியம் குறைபாட்டினால் எலும்புகளில் கனத்தன்மை குறைந்து, எலும்புகளிலும், மூட்டுகளிலும் வலி ஏற்படும். கால்சியம் மற்றும் பாஸ்பரஸ் சத்துக்கள் அதிகமுள்ள தொயிலிக்கீரை எனப்படும் தொய்யாக்கீரை, மூக்கிரட்டை, முடக்கறுத்தான் ஆகியவற்றை உணவாகச் சமைத்து உண்ண, உடலில் ஏற்படும் வாத வலி, மூட்டுவலி முதலியவை குணமாகும். தொயிலிக்கீரை மற்றும் மூக்கிரட்டை சளி, இருமல், மூச்சறை அழற்சி (பினீச) நோய்களுக்கும் சிறந்தது.

காலநிலை வேறுபாட்டாலும், குளிர்ந்த உணவுகளை உண்பதால் ஏற்படும் ஒவ்வாமையினாலும் உண்டாகும் சளி, இருமல், மூச்சுக் கோளாறுகள், மூக்கில் நீர்பாய்தல் போன்றவைக்கு நம் முன்னோர்கள் கீரைகளையே மருந்தாகப் பயன்படுத்திக் குணம்கண்டனர். தூதுவளை, முசுமுசுக்கை, முளைக்கீரை ஆகியவற்றை முறையாகப் பாகம்செய்து உண்ண, நுரையீரலை பலப்படுத்தி சளி, இருமல் ஆகிய நோய்களை போக்கும். முளைக்கீரையை உப்பு, மிளகு சேர்த்து, குழந்தைகள் முதல் பெரியவர் வரை அனைவரும் எடுத்துக்கொள்ள உடல் வலிமை பெறும்.

பொதுவாக, கழிச்சல்நோய் உள்ளவர்கள் கீரைகளைத் தவிர்க்க வேண்டும் எனும் கருத்து உள்ளது. Ulcerative colitis, IBS போன்ற கழிச்சல்நோய் உள்ளவர்கள் பண்ணைக்கீரை, பருப்புக்கீரை, பாற்சொறிக்கீரை, மணத்தக்காளிக்கீரை, போன்றவற்றை எடுத்துக்கொள்ளும்போது, அவை குடலுக்கு வலிமை கொடுத்து, புண்களை ஆற்றி, கழிச்சல்நோய்களைக் குணமாக்குகின்றன. சுக்கான்கீரை வயிற்றில் உள்ள புண்களை ஆற்றி, உடல் வெப்பத்தைக் குறைக்கும்.

மூலம் மற்றும் அதிலிருந்து குருதிவடிதல் ஆகிய நிலைகளில், பொன்னாங்கண்ணி, வெண்கீரைத்தண்டு ஆகியவற்றை உணவில் சேர்ப்பதினால் குணம்கிட்டும். மதுமேகம் எனும் குருதியில் சர்க்கரைஅளவு அதிகமாக உள்ளவர்களுக்கு நீராரை எனும் ஆரைக்கீரை சிறந்தது. அதிகக் குருதிஅழுத்தத்தைக் குறைக்க முருங்கைக்கீரை மற்றும் முளைக்கீரையை உணவில் சேர்த்துக்கொள்ளலாம். பெண்களுக்கு ஏற்படும் அதிகுருதிப்போக்கு என்னும் பெரும்பாடு நோய்க்குச் செங்கீரைத்தண்டு சிறந்தது.

குழந்தை ஈன்ற தாய்மார்கள், பால் சுரப்பை அதிகரிக்க கல்யாணமுருங்கை, முள்ளுக்கீரை, பருப்புக்கீரை, அகத்திக்கீரை ஆகியவைகளை முறைப்படி உணவில் சேர்த்துக்கொள்ளலாம். கல்யாணமுருங்கை இலையைத் தேங்காய் எண்ணெயில் சமைத்து உண்ண பால்சுரக்கும். மேலும் மாதவிடாய்க் கோளாறுகளையும் சரிசெய்து, மலட்டுத் தன்மையையும் நீக்கும்.

கீரைகள் காயகற்ப உணவுகள் ஆகும், அதாவது உடலைக் கல் போல் ஆக்கவும், நீண்டகாலம் நலமுடன் வாழவும் உதவுகின்றன. அனைத்துக் கீரை வகைகளும் பொதுவாக உடலுக்குக் குளிர்ச்சித் தன்மையை ஏற்படுத்தி, உடல் வெப்பத்தைக் குறைத்து, நீர்எரிச்சல் ஏற்படாமல் தடுத்து, மலத்தை இளக்கி, செரிமானக் கோளாறுகள் ஏற்படாமல், உடலினைச் சீராக இயக்கும் குணமுடையன. கீரைகளைப் பொருத்தவரை, இன்ன கீரை இன்ன வகையைச் சார்ந்தது தான் என்ற வகையறிதல் முறையையும், அவற்றைப் பக்குவமாய்ச் சமையல் செய்யும் உணவுக்கலை முறையையும், நாம் அடுத்த தலைமுறைக்கும் பக்குவமாய்க் கொண்டு செல்ல கடமைப்பட்டிருக்கின்றோம்.

நம் நாட்டு உணவுமுறைகளையும், அதன் ஈடில்லா சத்து முறைகளையும் பாராட்டியே ஆக வேண்டும். அதன் பொருளாதாரப் பிண்ணனியை உற்று நோக்கினால், மிகவும் விலை குறைந்ததாகவும், ஊட்டச்சத்து உள்ளதாகவும் உள்ளது. குறைவான விலையில் உள்ளதற்கு நம் மனம் என்றுமே "மதிப்பீடு" கொடுக்கத் தவறிவிடும். அவ்வாறாக இல்லாமல், ஊட்டச்சத்தினை மனதில் கொண்டு, "சாயமேற்றல் அல்லாத சத்தான" இக்கீரை வகைகளை நாள்தோறும் உணவுமுறைகளில் சேர்த்து நோய் நொடியற்ற "நலமான" வாழ்விற்கு வழிவகை செய்வோம்!

குறிப்பு கீரைகளை, பாலுடனும் மீனுடனும் சேர்த்து உண்ணக்கூடாது.

# அரசு விழாக்கள்

## ஆகத்துத் திங்கள் 2021

### வல்வில் ஓரி

வீரத்திலும், ஈரத்திலும் சிறந்து விளங்கிய கடையெழு வள்ளல்களில் குறிப்பிடத்தக்கவராக விளங்கியவர் கொல்லிமலையை ஆண்ட வல்வில்ஓரி. வளம் கொண்ட மலை நாட்டையும், மழவர் எனும் வீரர்களையும் கொண்டவர் ஓரி. அவருக்கு "ஆதன் ஓரி" என்ற பெயரும் உண்டு. ஓரி என்னும் பெயரை உடைய குதிரையை வைத்திருந்தார்.



வில்வித்தை வீரன் ஓரி. ஒரு நாள் காட்டுக்கு வேட்டையாடச் சென்றார். அப்பொழுது வலிமையான புலி ஒன்று பெரிய யானையை வீழ்த்த பார்த்தது. அதைக் கண்ட ஓரி, தன் கூரிய அம்பை எடுத்து யானையைக் குறி வைத்து எய்தார். அம்பு யானையை வீழ்த்தி, பின் அருகில் இருந்த புலியின் வாய்வழியே உடலைத் துளைத்து அடுத்து நின்ற மானை மடியச் செய்து, காட்டுப் பன்றியின் உயிரைப் பறித்து இறுதியில் புற்றில் இருந்த உடும்பின் உடலைத் தைத்தது.

யானை, புலி, மான், பன்றி, உடும்பு ஆகிய விலங்குகளை ஒரே அம்பில் வீழ்த்தியதை அங்குத் தன் கூட்டத்தினருடன் தங்கியிருந்த வன்பரணர் கண்டு வியந்து ஓரியின் வலிமையையும், வில் திறத்தையும் புகழ்ந்து பாடினார். அதன் மூலம் 'வல்வில் ஓரி' என்பதன் பெயர்க் காரணத்தை அறிய முடிகிறது.

வரலாற்றுப் புகழ் பெற்ற வல்வில் ஓரி மன்னன், கொல்லிமலையில் புகழ்பெற்ற அறப்பளீசுவரர் கோவிலை நிறுவினார். இராசிபுரத்திலும், சிங்களாந்தபுரத்திலும் புகழ்பெற்ற சிவன் கோயில்களை நிறுவி திருப்பணி மேற்கொண்டார் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு புகழ்பெற்ற கொல்லிமலை, தற்போதும் முக்கனிகளோடு கொய்யா, ஆரஞ்சு, அன்னாசி போன்ற பழங்களும், மிளகு, ஏலக்காய், திப்பிலி போன்றவை விளையும் இடமாக உள்ளது.

தமிழக அரசு சார்பில் வல்வில் ஓரி மன்னனுக்கு நாமக்கல் மாவட்டத்தில் உள்ள கொல்லிமலை செம்மேட்டில் சிலை அமைக்கப்பட்டு, ஆடிப்பெருக்கு எனப்படும் ஆடிப்பதினெட்டாம் நாள் ஆண்டுதோறும் வல்வில் ஓரி விழா நடத்தப்பட்டு வருகிறது.

### பொதுவுடைமை வீரர் ப.ஜீவானந்தம்

பொதுவுடைமை வீரர் ப.ஜீவானந்தம் அவர்கள் 21.08.1907 ஆம் நாள் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள பூதப்பாண்டி சிற்றூரில் பிறந்தார். இவரது இயற்பெயர் சொரிமுத்து.

ஜீவா தன் 14ஆம் அகவையிலேயே விடுதலைப் பற்றுடன் இருந்தார். காந்தியடிகள் அறிவிப்பால் நாடெங்கும் சத்தியாகிரகம் நடைபெற்றபோது வெளிநாட்டுத் துணிகள் எரிக்கப்பட்டன. அதைப் பார்த்து எழுச்சிபெற்ற ஜீவா, தான் அணிந்திருந்த வெளிநாட்டுத் துணிகளைக் கழற்றி, எரியும் நெருப்பில் எறிந்துவிட்டு, கோவணத்துடன் வீடு திரும்பினார்.



ஜீவாவின் அன்னையார் காலமானபோது, தாய்க்குத் தலைமகனான ஜீவாதான் கொள்ளி வைக்க வேண்டும். அப்போது உறவினர்கள் எடுத்துத் தரும் புத்தாடையை உடுத்திக்கொள்ள வேண்டும். ஜீவா தனக்குக் கதர் ஆடைகளைத் தருமாறு உறவினர்களிடம் கேட்டார். ஆனால் அவர்கள் அதை ஏற்காமல் அவருக்கு ஆலைத் துணிகளை வாங்கித் தந்தனர். ஜீவா அவற்றை ஏற்க மறுத்துவிட்டார். வேறுவழியின்றி இறுதிச் சடங்குகளை ஜீவாவின் தம்பி நடராசன்தான் செய்தார்.

ஜீவா தன் நண்பர்களுடன் சேர்ந்து நாடகம் போடுவார். அவர் போட்ட கரணராஜன் அல்லது சுதந்திரவீரன்

என்ற நாடகம் மக்களுக்கு விடுதலை உணர்ச்சியைத் தூண்டியது. ஜீவா தன் நண்பர்களுடன் சேர்ந்து பழைய பக்திப் பாடல்களை புதிய பொருளில் சுதந்திர உணர்வுடன் பாடுவார். `சொல்லு நா நமசிவாயமே' என்ற பாடலை 'சொல்லு நா சுயராஜ்யமே' என்று பாடுவார்.

பூதப்பாண்டியில் உள்ள திருப்பணிச் சங்கத்தில் சேர்ந்து பொதுக் கூட்டங்களில் சுதந்திரம், தீண்டாமை ஒழிப்பு பற்றிப் பேசுவார். சாதிக் கொடுமை அதிகமிருந்த அந்தக் காலத்தில், பூதப்பாண்டியில் திருவிழா நடந்த அந்தச் சமயத்தில், தடையை மீறி தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்த தனது நண்பனைக் கோவிலுக்குள் அழைத்து வந்தார். இந்தச் செயலுக்காக தந்தைக்கும் மகனுக்கும் இடையே சண்டை வந்தது. அவரது தந்தை ஜீவாவிடம், ''இது போன்ற வேலைகளில் ஈடுபட்டால் வீட்டிற்கு வரக் கூடாது'' என்றார். அதற்கு ஜீவா, "என் கொள்கைக்காக வீட்டை விட்டு வெளியேறுவேனே தவிர என் கொள்கையை ஒருபோதும் விட்டுக் கொடுக்கமாட்டேன்" என்று கூறி அந்த ஊரை விட்டே வெளியேறினார்.

வைக்கம் போராட்டத்தில், ஈ.வெ.ரா., பெரியார், காமராசர் ஆகியோருடன் ஜீவாவும் கலந்து கொண்டு போராட்டம் நடத்தினார். காரைக்குடி அருகில் உள்ள சிராவயல் என்ற சிற்றூரில் காந்தி ஆசிரமத்தை உருவாக்கினார். சாதி, மத, இனப் பாகுபாடுகள் இல்லாத ஒரு சமுதாயத்தை உருவாக்குவதே இந்த ஆசிரமத்தின் நோக்கமாக இருந்தது.

நாளடைவில் ஆசிரமத் தலைவருக்கும் ஜீவாவுக்கும் இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாட்டின் காரணமாக, ஜீவா ஆசிரமத்தை விட்டு வெளியே வந்து 'உண்மை விளக்க நிலையம்' என்ற ஒரு புதிய ஆசிரமத்தை நிறுவினார்.

தமிழ்நாட்டில் இராஜாஜி தலைமையில் நடைபெற்ற உப்பு சத்தியாகிரகப் போராட்டத்தில் தொண்டர்களைக் காவல் துறையினர் கடுமையாகத் தாக்கினர். இந்த அடக்குமுறையை கண்டித்து ஜீவா ஈரோட்டில் நடைபெற்ற சுயமரியாதை மாநாட்டில் கடுமையாகப் பேசினார். பொதுக்கூட்டங்களில் ஆங்கிலேய ஆட்சியை ஜீவா கடுமையாகத் தாக்கிப்பேசுவதைக் கண்டு அஞ்சிய ஆங்கிலேய அரசு, ஜீவா எந்த மேடையிலும் பேசக் கூடாது என்று வாய்பூட்டுச் சட்டம் போட்டது. மறுநாள் அதை மீறி கோட்டையூரில் நடைபெற்ற கூட்டத்தில் முழங்கினார். ஜீவாவை காவல்துறை கைது செய்தது.

விடுதலைப் போராட்ட மாவீரன் பகத்சிங் சிறையிலிருக்கும் போது எழுதிய 'நான் ஏன் நாத்திகனானேன்' என்ற ஆங்கில கடிதத்தை, ஜீவா தமிழில் மொழிபெயர்த்தார். பெரியார் அந்நூலை வெளியிட்டார். ஆங்கிலேய அரசு அந்நூலுக்குத் தடை விதித்தது. பெரியாரையும், ஜீவாவையும் கைது செய்து சிறையில் அடைத்தது. தமிழக வரலாற்றில் நூல் எழுதியதற்காகச் சிறைத் தண்டனை பெற்ற முதல் எழுத்தாளர் ஜீவாதான்.

காரல் மார்க்ஸ் வகுத்த பொதுவுடைமைக் கொள்கைகளே உலகெங்கும் புதிய சமுதாய மாற்றத்திற்கு வழிகாட்டும் எனக் கருதிய ஜீவா, தமிழகத்தில் பொதுவுடைமை இயக்கத்தைத் தோற்றுவித்தார். பாட்டாளிகளுக்காகப் பாடுபடும் தலைவராகத் தன்னை முழுமையாக மாற்றிக்கொண்ட ஜீவா, அச்சுத் தொழிலாளர் நலச் சங்கத்தை ஏற்படுத்தினார்..

தன் வாழ்நாளில் தனக்கென்று எதையும் வைத்துக் கொள்ளாத ஜீவா, ஒரு துறவியைப் போலவே வாழ்ந்து வந்தார். 1952 ஆம் ஆண்டு சென்னை வண்ணாரப்பேட்டைத் தொகுதியிலிருந்து சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஜீவா சட்டசபை நிகழ்ச்சிகளில் தமிழிலேயே பேசவும், தமிழிலேயே நடவடிக்கைகள் இருக்கவேண்டும் எனவும் வற்புறுத்தியதன் விளைவாக, படிப்படியாகச் சட்டசபை நிகழ்ச்சிகள் தமிழில் நடைபெறத் தொடங்கின. சமுதாயத் தொண்டில் அக்கறைக் காட்டிய ஜீவா அவர்கள் 18.1.1963 அன்று மறைந்தார்.

பொதுவுடைமைத் தலைவர் ஜீவானந்தம் அவர்கள் நினைவாக நாகர்கோவில் நகரில் அரசு சார்பில் மணிமண்டபம் அமைக்கப்பட்டு 19.04.1998 அன்று திறந்து வைக்கப்பட்டது.

## வீரன் பூலித்தேவன்



பூலித்தேவன் 1.9.1715 ஆம் ஆண்டு பிறந்தார். இலஞ்சியில் சுப்பிரமணிய பிள்ளை என்ற தமிழறிஞரிடம் இலக்கண இலக்கியங்களை முறையாகக் கற்றார். இவர் கவிதை புனையும் திறமையும் பெற்றிருந்தார்.

விஜயரங்க சொக்கநாத நாயக்கர் ஆட்சியின் போது மதுரையின் வடக்குப் பகுதியில் பதுங்கியிருந்து மக்களைக் கொன்றுவந்த ஒரு கொடும்புலியைக் கொன்றதால் இவருக்குச் சொக்கநாத நாயக்கர் பரிசுகளையும் 'வடக்கத்தான் பூலித்தேவன்' என்ற பட்டத்தையும் வழங்கிச் சிறப்பித்தார்.

அந்நாளில் திருநெல்வேலிசீமை கிழக்குப் பாளையங்கள், மேற்குப் பாளையங்கள் என்று

இரண்டு பிரிவுகளாக இருந்தன. மேற்குப் பாளையங்களுக்குப் பூலித்தேவன் தலைமை தாங்கினார்.

ஆற்காடு நவாபுக்காக ஆங்கிலேயர்கள் திருநெல்வேலி சீமைக்கு வரி வசூல் செய்ய வந்தபோது பூலித்தேவன் "வரி என்னும் பெயரால் ஒரு மணி நெல்லைக் கூட கட்டமாட்டேன்" என்று மறுத்துக் கூறினார். இதன் காரணமாக அவரது ஊரின் பெயர் "நெற்கட்டான் செவ்வல்" என வழங்கப்பெற்று, பின்னாளில் "நெல்கட்டும் செவல்" என்றே வழங்கி வருகிறது.

1755ஆம் ஆண்டு முகம்மது அலியின் தளபதியான மாபூஸ்கான் துணையுடன் அலெக்ஸாண்டர் என்ற ஆங்கிலேய தளபதி, பூலித்தேவன் மீது போர்த் தொடுத்தான். பூலித்தேவன் ஆங்கிலேயப் படைகளை உத்திரக்கோட்டை என்னுமிடத்தில் வழிமறித்துத் தாக்கி விரட்டியடித்தார். இந்திய மண்ணில் ஆங்கிலேயர் சந்தித்த நேரடி போரில் ஆங்கிலேயர்களுக்கு ஏற்பட்ட முதல் தோல்வி இதுதான்.

1806ஆம் ஆண்டு நடைபெற்ற வேலூர்ப் புரட்சிக்கும், 1857ஆம் ஆண்டு நடைபெற்ற சிப்பாய்க் கலகத்திற்கும் முன்பே மாவீரன் பூலித்தேவன் விடுதலைப் போரை நடத்தியதால் இதுவே முதல் முழக்கமாகச் சொல்லப்படுகிறது.

இந்தத் தோல்வியால் ஆங்கிலேயர்கள், ஆற்காட்டுப் படை, ஆங்கிலப் படை இவற்றுடன் சுதேசிப் படையைத் தோற்றுவித்து கான்சாகிப் என்ற யூசுப்கானிடம் ஒப்படைத்தார்கள்.

கான்சாகிப் பெரும்படையுடன் ஸ்ரீவில்லிபுத்தூர் கோட்டையைக் கைப்பற்றினான். திருநெல்வேலி சீமையில் முதன்முதலில் கொல்லங் கொண்டான் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றினான். பூலித்தேவனின் கோட்டைகளையெல்லாம் தாக்கி அழித்துவிட்டு இறுதியில் பூலித்தேவனின் வாசுதேவ நல்லூர்க் கோட்டையை 18 பவுண்டு வெடிகுண்டுகளைக் கொண்டு தாக்கினான்.

இந்தச் சமயத்தில் நெற்கட்டான் செவலில் இருந்த 3,000 வீரர்கள் கான்சாகிப் படைகளுக்குள் நுழைந்து கொன்று குவித்தனர். அவர்களின் கூடாரங்களுக்குத் தீ வைத்தனர். கான்சாகிபின் படைவீரர்களை ஓட ஓட விரட்டியடித்தனர். வாசுதேவ நல்லூரில் கோட்டையில் நடந்த போரில் பூலித்தேவன் வெற்றியடைந்தார். ஏறத்தாழ 2 மாதங்களாக நடந்த போரில் கான்சாகிப் தோல்வியுற்றான்.

இதனால் கான்சாகிப் சூழ்ச்சி செய்து பூலித்தேவனை வெல்ல நினைத்தான். அதன்படி, பூலித்தேவனுக்கு உதவிய படையினரை விலை கொடுத்து வாங்கினான். மேலும் ஒரு பெரும்படையைத் திரட்டிக் கொண்டு பூலித்தேவனின் கோட்டையைத் தாக்கினான். இப்போர் ஏறத்தாழ மூன்றாண்டுகள் நடைபெற்று இறுதியில் பூலித்தேவன் போரில் தோல்வியுற்றார்.

ஆங்கிலேயப் படைகளுடன் நடைபெற்ற இறுதிப் போரின்போது பூலித்தேவன் கோட்டையைவிட்டு வெளியேறி தன் ஆதரவாளர்களுடன் மேற்குத் தொடர்ச்சி மலையில் தலைமறைவானார்.

பூலித்தேவனை நேருக்கு நேர் நின்று போரிட்டு வெல்ல முடியாது என்பதை உணர்ந்த ஆங்கிலேயர்கள் கடவுள் பக்தி மிகுந்த பூலித்தேவனை பௌர்ணமி பூஜைக்குத் தந்திரமாக வரவழைத்து, சூழ்ச்சி செய்து கைது செய்தனர். 1767இல் மாவீரன் பூலித்தேவனை, ஆங்கிலேயர் கைது செய்து அழைத்து வரும்போது, சங்கரன்கோயிலுக்குள் கும்பினியர் புடைசூழச் சென்று இறைவனை வழிபட்டார் என்றும், அத்துடன் அவரது வாழ்க்கை முடிவுற்றது என்றும் கூறப்படுகிறது.

திருநெல்வேலி மாவட்டம், சிவகிரி வட்டம், நெற்கட்டான் செவலில் விடுதலைப் போராட்ட வீரர் பூலித்தேவன் நினைவு மாளிகை 28.12.1998 அன்று திறந்து வைக்கப்பட்டது.

## தீரன் சின்னமலை

தீரன் சின்னமலை அவர்கள் ஈரோடு மாவட்டத்தில் உள்ள காங்கேயம் அருகில் மேலப்பாளையம் என்னும் சிற்றூரில் ஏப்பிரல் 17, 1756 அன்று பிறந்தார். இவரின் இயற்பெயர் தீர்த்தகிரி. இவர் பழைய கோட்டை பட்டக்காரர் பரம்பரையைச் சேர்ந்தவர் என்பதால் இளம் வயதிலேயே தீர்த்தகிரி சர்க்கரை எனப் பெயர் பெற்றார்.

தீரன் சின்னமலை அவர்கள் இளம் வயதிலேயே மல்யுத்தம், வில்பயிற்சி, வாள் பயிற்சி, சிலம்பாட்டம், தடிவரிசை போன்ற பயிற்சிகளைப் பெற்று, போர்க்கலையில் சிறந்தவராக விளங்கினார். அப்போது கொங்கு நாட்டை மைசூர் மன்னர் ஆட்சி செய்ததால் கொங்குநாட்டு வரிப்பணம் சங்ககிரி வழியாக மைசூர் அரசிற்குச் சென்றது.

தீர்த்தகிரி அவர்கள் மைசூர் அரசுக்குக் கொண்டு செல்லும் வரிப்பணத்தைப் பிடுங்கி ஏழைகளுக்குக் கொடுத்தார். வரியைக் கொண்டு செல்லும் தண்டல்காரரிடம், ' கொங்கு நாட்டு உழவர்கள் விதைக்கிறார்கள். மைசூர்காரருக்கு வரிப்பணம் ஏன் கொடுக்க வேண்டும்? இதுவரை தெரியாமல் வசூல் செய்துவிட்டார். இனிமேல் வசூல் செய்யவிடமாட்டோம். வசூல் என்ற பெயரில் ஒரு பணத்தைக் கூட கொண்டு செல்லவும் விடமாட்டோம்'' என்றார்.

தண்டல்காரர் தீர்த்தகிரியிடம், 'தம்பி! இவ்வளவு உறுதியாகச் சொல்லும் நீ யாரென்று நான் தெரிந்து கொள்ளலாமா'? என்றார். அதற்குத் தீர்த்தகிரி, "நானா? சென்னிமலைக்கும் சிவன் மலைக்கும் இடையில் ஒரு சின்னமலை பறித்ததாகச் சொல்'' என்று சொல்லி அனுப்பினார். அது முதல் தீர்த்தகிரிக்குச் 'சின்னமலை' என்ற பெயர் வழங்கலாயிற்று.

1782இல் திப்புசுல்தான் மைசூர் ஸ்ரீரங்கப்பட்டணத்தில் ஆட்சிக்கு வந்து கிழக்கிந்திய கம்பெனியாரை எதிர்த்துக் கடும்போர் செய்திருந்தார். அப்போது மாவீரன் சின்னமலை ஆயிரக்கணக்கான கொங்கு இளைஞர்களைத் திரட்டி மைசூர் சென்றார். திப்பு சுல்தானுக்கு உதவி செய்ததனாலும், கோவை கோட்டையை முற்றுகையிடச் சென்றதாலும் சின்னமலை மீது தீராத கோபம் ஆங்கிலேயர்களுக்கு ஏற்பட்டது.



ஆங்கிலேயப் படையானது கர்னல் மேக்ஸ்வெல் தலைமையில் இருமுறையும், ஹாரிஸ் என்பவன் தலைமையில் ஒருமுறையும் என மூன்றுமுறை தீரன் சின்னமலையிடம் தோல்விகண்டது. இதனை நினைக்க நினைக்க ஆங்கிலேயத் தளபதிகளுக்கு வெறுப்பாய் இருந்தது.

இனி கத்தி, ஈட்டி, வாள்வீச்சு செய்வது, குதிரைப் படையைப் பயன்படுத்தாமல் பீரங்கி, துப்பாக்கி, வெடிகுண்டுகள் மூலம் சின்னமலையைத் தோற்கடிக்க வேண்டும் என்று நினைத்த ஆங்கிலேயத் தளபதிகள் அதற்கான ஆலோசனைகளில் இறங்கினார்கள்.

தங்களது ஓடாநிலைக் கோட்டையை அழிப்பதற்காக ஆங்கிலேயப் படையானது முப்பத்தாறு பீரங்கிகள் மற்றும் பல துப்பாக்கிகளுடன் இன்னும் சில நாட்களில் அக்கோட்டையினை நோக்கி வரக்கூடும் என்பதை, முன்பு தன்னுடனும் திப்புசுல்தானிடமும் பணியாற்றிய சுபேதார் வேலப்பன் மூலம் அறிந்த சின்னமலை தேவையான பீரங்கிகளும், துப்பாக்கி குண்டுகளும், வெடிமருந்துகளும் தயாரிக்க தமக்கு ஏற்ற இடமாக விருப்பாட்சியில் கருமலைக் காடுகளைத் தேர்வு செய்து அங்குச் சென்றார்.

திட்டமிட்டபடி ஓடாநிலைக் கோட்டையினை ஆங்கிலேயப் படைகள் எட்டிப்பிடித்த போதிலும், தீரன் சின்னமலையோ, அவரது தம்பிகளோ, படைவீரர்களோ எவரும் இல்லாதது பெருத்த ஏமாற்றத்தை ஆங்கிலேயருக்கு அளித்தது. ஆனால் அங்கு சுபேதார் வேலப்பன் எழுதிய மடல் மட்டும் கிடைத்தது. அதைப் பார்த்து கோபம் அடைந்த ஆங்கிலேயர்கள் வேலப்பனை அங்கேயே சுட்டனர்.

பின்னர், சின்னமலை விருப்பாட்சியில் உள்ள கள்ளிக் கோட்டையில் இருப்பதைத் தன் ஒற்றர்கள் மூலம் அறிந்த ஆங்கிலேயர்கள் அவனைக் கைது செய்ய, சின்னமலையின் சமையற்காரன் நல்லான் என்பவனுக்கு இருபது காணி நிலமும், பொன்னும் பொருளும் தருவதாகக் கூறி அவனைத் தம் வழிக்குக் கொண்டு வந்தனர்.

இதனை அறியாமல் தீரன் சின்னமலையும் அவரது தம்பிகளும் உணவருந்த சென்றபோது, நல்லான் சற்றும் தாமதிக்காமல் வீட்டிற்கு முன்னிருந்த பெட்டியைத் தள்ளியதும், அதனுள் ஏற்கெனவே ஆங்கிலேயரால் ஏற்பாடு செய்யப்பட்ட சுரங்கப்பாதை வழியாக துப்பாக்கி வெடிகுண்டுகளுடன் வந்த ஆங்கிலேயப் படை வீரர்கள் மூவரையும் சுற்றி வளைத்தனர். பின்னர் அவர்கள் சங்ககிரி கோட்டைக்குள் அழைத்துச் செல்லப் பட்டனர்.

1805ஆம் ஆண்டில் ஒருநாள் பகல்வேளை சங்ககிரிக் கோட்டையில் போலி நீதி விசாரணை நடைபெற்றது. ஆங்கிலேயர் அவர்களிடம் 'மன்னிப்பு' என்று கேட்டால் உயிருடன் விடுகிறோம் என்றனர். ஆனால் சின்னமலையும் அவரது தம்பிகளும் அதற்கு இணங்கவில்லையென்பதால், 1805ஆம் ஆண்டு சூலை மாதம் 31ஆம் நாள் நால்வரும் தூக்கிலிடப்பட்டனர்.

சென்னை, கிண்டி, திரு.வி.க. தொழிற்பேட்டையில் அமைந்துள்ள சுதந்திரப் போராட்ட வீரர் தீரன் சின்னமலை திருவுருவச் சிலைக்கு அவரது பிறந்தநாளான ஏப்பிரல் திங்கள் 17ஆம் நாள் அன்று ஆண்டுதோறும் தமிழ்நாடு அரசின் சார்பில் மாலை அணிவித்து மலர் தூவி சிறப்பு செய்யப்படுகிறது. சூலை 31 அன்று தமிழ்நாடு அரசின் சார்பில் தீரன் சின்னமலை நினைவு நாள் கொண்டாடப்பட்டு வருகிறது.

மேலும் அந்த மாவீரரின் புகழுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் ஒவ்வோர் ஆண்டும் ஆடிப் பதினெட்டாம் நாளில் அவருக்கு விழா எடுக்கப் பட்டு வருகிறது. அன்னாரின் வீரத்தையும் தியாகத்தையும் நினைவுகூரும் வகையில் சேலம் மாவட்டம் சங்ககிரியில் தீரன் சின்னமலை நினைவுச் சின்னம் உருவாக்கப்பட்டு 23.12.2013 அன்று திறந்து வைக்கப்பட்டது.

ஈரோடு மாவட்டம், அரச்சலூர், ஓடாநிலையில் தீரன்சின்னமலை மணி மண்டபம் 01.03.2006 அன்று திறந்து வைக்கப்பட்டது.

# துறைசார் தூயதமிழ்ச் சொல்லரங்கம்-2

தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் கோவை, தூயதமிழ் இளைஞர் பாசறை இணைந்து இணையவழியில் நடத்திய 'துறைசார் தூயதமிழ்ச் சொல்லரங்கத்தின் இரண்டாம் அமர்வு' 17.07.2021 காரிக்கிழமை மாலை 6.30 மணிமுதல் சிறப்பாக நடைபெற்றது.

அமர்வில் தூயதமிழ் இளைஞர் பாசறையின் தலைவர் திரு.சி.மணிகண்டன் அவர்கள் வரவேற்புரை வழங்க, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் பதிப்பாசிரியர் முனைவர் மா.பூங்குன்றன் அவர்கள் கலைச் சொல்லாக்கத்தின் தோற்றத்தையும், அதன் வடிவத்தையும் பதிவு செய்து தொடக்கவுரை நிகழ்த்தினார்.



சி.மணிகண்டன்

அமர்வில் திருவண்ணாமலை மாவட்டத்தைச் சேர்ந்த, 12ஆம் வகுப்பு மாணவர் செல்வன் ம.இலக்கியவாணன் அவர்கள் கட்டுமானத்துறையைச் சார்ந்த 10 தமிழ்க் கலைச்சொற்களை வழங்க, அவரைத்தொடர்ந்து நாமக்கல் மாவட்டத்தைச் சேர்ந்த, முதுஅறிவியல் வேளாண்துறை மாணவர் ஜெ.லோகேஸ்வரன் அவர்கள் வேளாண்துறையைச் சார்ந்த 10 தமிழ்க் கலைச்சொற்களை வழங்கினார்.

இருவரும் தமிழ்க் கலைச்சொற்களையும் அச்சொல்லாக்கங்களுக்கான விளக்கங்களையும் மனங்கொள்ளத்தக்க வகையில் எடுத்துரைத்தனர். இவர்கள் இருவரும் எடுத்துரைத்த தமிழ்க் கலைச் சொற்கள் குறித்தான தங்களது கருத்துகளை அமர்வில் கலந்து கொண்ட அறிஞர்களும் ஆய்வாளர்களும் வழங்கினார்கள்.

அதனைத்தொடர்ந்து தூயதமிழ் இளைஞர் பாசறையின் அறிவுரைஞர் நற்றமிழ் செ.வ.இராமாநுசன் அவர்கள் வாழ்த்துரை வழங்க, நிறைவாக செல்வன் இ.நேரு நன்றியுரை கூறினார்.

அமர்வில் அமர்வில் அகரமுதலி இயக்ககத்தினர், பாசறையின் உறுப்பினர்கள் மற்றும் இலண்டன், தில்லி, கோவா, துபாய், அமீரகம் போன்ற அயல்நாட்டு வாழ் தமிழர்களும் கலந்து கொண்டுச் சிறப்பித்தனர். நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ் ஆர்வலர்கள் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

அமர்வை முழுவதுமாக மதிப்புறு மொழியியல் பயிற்றுநர் முனைவர் இந்திரா பிரியதர்ஷினி அவர்கள் தொகுத்து வழங்க, கோவை, தூயதமிழ் இளைஞர் பாசறையின் இயக்குநர் மற்றும் தலைவர் திரு.சி. மணிகண்டன் ஒருங்கிணைத்திருந்தார்.



ம.இலக்கியவாணன்

### கட்டுமானத்துறைசார் கலைச்சொற்கள்

1. Hollow Bricks: பொற்றைக்கல்.
2. Panel House: பலகை வீடு.
3. Polisher Machine: மெருகு பொறி.
4. Dumper Machine: தளர்பொருள் கடத்தி.
5. Ceramic Tiles: வெங்களி ஓடு.
6. Mazzanine floor: இடைமாடித்தளம்.
7. Wooden Float: சமன்கோல்.
8. Insulation Tape: மின்காப்பு நாடா.
9. Switch Box:சொடுக்கிப் பலகை.
10. Mobile House: அசைதகு வீடு.



ஜெ.லோகஸ்வரன்

### வேளாண்துறைசார் கலைச்சொற்கள்

1. Compound Leaves கூட்டிலை
2. Delint - பஞ்சு இழைநீக்கம்
3. Black Shank - தண்டழுகல்
4. Pre emergence rot வித்தழுகல்
5. Protease புரத நொதிகள்
6. Tonoplast வெற்றிடச்சுவர்
7. Adelphous கற்றையான
8. Adventitious bud இடமாறிப்பிறந்த மொட்டு
9. Praying mantis தொழுபூச்சி
10. Aleurone புரதமணி